கழக வெளியீடு: க0சு௫

# தமிழ் காத்த தலைவர்கள்

ஆசிரியர்:
திருக்குறள்மணி, வித்துவான், செஞ்சொற்புலவர்
திரு அ க நவநீதகிருட்டிணன்
தமிழாசிரியர், ம தி தா இந்துக் கலாசாலை, திருநெல்வேலி.

*[Approved by the Madras Text-Book Committee, for class use, vide Page 23 of the Fort St. George Gazette dated 18-5-1966]*



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி–6, சென்னை–1.

1967

# அணிந்துரை

ஒருவன் உயர்ந்த கலைஞனாகவும் அறிஞனாகவும் விளங்குவதற்கு அவனுடைய தாய்மொழியே அடிப்படையாக அமைகின்றது. அத்தகைய தாய்மொழியிடத்தே தணியாத பற்று, எல்லோருக்கும் எழுதல் வேண்டும். மாணவர்க்கு இளம் பருவத்திலேயே தாய்மொழிப் பற்றை உண்டு பண்ண வேண்டுவது இன்றியமையாத செயலாகும். அதற்குத் தாய்மொழிப் பற்றுக்கொண்டு தொண்டாற்றிய தலைவர்களின் வரலாற்றைப் படிப்பது பெரும்பயனை விளைக்கும். இந்நோக்கத்துடன் ஆக்கப்பெற்றதே 'தமிழ் காத்த தலைவர்கள்' என்னும் இச்சின்னூலாகும். இஃது உயர்நிலைப்பள்ளியின் கீழ்வகுப்புக்களிற் பயிலும் இளமாணவர்க்கு ஏற்றவாறு எளிய நடையில் எழுதப் பெற்றுள்ளது. இச்சிறு பணியினை எளியேற்கு வழங்கி ஆதரித்த கழக ஆட்சியாளர்க்கு நன்றி.

இதனைக் கண்ணுறும் கலாசாலைத் தலைவர்களும் தமிழ்ப்பணி யாற்றும் புலவர் பெருமக்களும் இச்சிறு நூலைத் தத்தம் பள்ளிகளில் பாட நூலாக்கி, எளியேனது தமிழ்ப்பணிக்கு ஊக்கம் ஊட்டுமாறு பணிவன்புடன் வேண்டுகிறேன்.

தமிழ் வெல்க!

அ. க. நவநீதகிருட்டிணன்

# உள்ளுறை

பக்கம்

# தமிழ் காத்த தலைவர்கள்



## 1. தமிழும் தலைவரும்

**தமிழின் பழைமையும் தலைமையும்**

உலகில் பல மொழிகள் வழங்குகின்றன. இக்காலத்தில் ஆயிரத்திற்கு மேற்பட்ட மொழிகள் பேசப்படுகின்றன என்று அறிஞர்கள் கூறுகின்றனர். அவற்றுள் மிகவும் பழைமையான மொழிகள் சிலவே. தமிழ், வடமொழி, இலத்தீன், கிரேக்கம் போன்ற மொழிகளே மிகப் பழைமையானவை. அவற்றுள்ளும் ஒரு சில மொழிகள் மக்களுடைய பேச்சு வழக்கிலிருந்து மறைந்துவிட்டன. நூல் வழக்கிலும் பேச்சு வழக்கிலும் இன்று வரை மிகச் சிறந்து வழங்கும் பழைமையான மொழிகள் ஒன்றிரண்டே. அத்தகைய மொழிகளில் தலைமையான மொழி நம் தாய் மொழியாகிய தமிழே. இதனை உலகில் உள்ள மொழி அறிஞர்கள் பலரும் ஒப்புக்கொள்வார்கள்.

**தமிழ் முதல்மொழி**

பழமையும் பெருமையும் வாய்ந்த நம் தமிழ்மொழி தோன்றிய காலத்தை எவரும் இதுவரை அளவிட்டு உரைக்க முடியவில்லை. அவ்வளவு பழமையான காலத்திலேயே தமிழ் தோன்றியுள்ளது. உலகம் தோன்றி, மக்கள் தோன்றியகாலத்திலேயே முதன்முதல் தோன்றிய மொழி நம் தமிழாக இருக்கலாம். இம்மொழியில் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய நூல்கள் சில இருக்கின்றன. அவைகளே தமிழின் பழமைக்குத் தக்க சான்றுகள் ஆகும்.

**புலவர்களைப் போற்றிய அரசர்கள்**

இத்தகைய தமிழைத் தமிழ்நாட்டு அரசர்கள் பல்லாயிரம் ஆண்டுகளாகக் காத்து வளர்த்து வந்தனர். தமிழ்நாட்டை ஆண்ட மூவேந்தர்களாகிய சேர சோழ பாண்டியர்கள் தமிழ்ப் புலவர்களை நன்கு ஆதரித்தனர். அவர்கள், தம்மைப் புலவர்கள் காணவராத நாளை வீணுகக் கழிந்த நாள் என்று வெறுப்பர். அவ்வாறு புலவர்களைப் போற்றி ஆதரித்தமையால் தமிழ் வளர்ந்தது.

**பாண்டியர் காத்த பழந்தமிழ்**

தமிழ்நாட்டு மூவேந்தர்களில் பாண்டியர் தமிழை வளர்ப்பதில் மிகுந்த ஆர்வம் காட்

டினர். அவர்கள் தங்கள் தலைநகரங்களில் தமிழ்ச் சங்கங்களை அமைத்தனர். அச்சங்கங் களில் நாட்டிலுள்ள தமிழ்ப் புலவர்களை யெல்லாம் ஒன்று கூட்டினர். அவர்கள் வாழ்க் கைக்கு வேண்டுவனவற்றை யெல்லாம் கொடுத்துப் பேணினர். அதனால் புலவர்கள் எந்தக் கவலையுமின்றி இன்பமாக வாழ்ந்தனர். தம்முடைய நேரத்தையெல்லாம் தமிழை ஆராய்வதிலேயே கழித்தனர். புதிய தமிழ்ப் பாடல்களை இயற்றினர். அரிய தமிழ் நூல் களை ஆக்கினர். சிறந்த பாடல்களும் உயர்ந்த நூல்களும் தோன்றத் தோன்றத் தமிழ் வள முடன் வளர்ந்துகொண்டே வந்தது.

**புலவர்கள் வளர்த்த தமிழ்**

பாண்டியரைப் போன்ற பேரரசர்களும், பாரி வள்ளலைப் போன்ற சிற்றரசர்களும் தமிழைக் காத்து வளர்த்து வந்தனர். அவர் கள் ஆதரவைப் பெற்ற தமிழ்ப் புலவர்களும் தமிழை வளர்ப்பதில் கண்ணும் கருத்துமாய் இருந்தனர். தமிழுக்கு உயர்வைத் தரும் நூல்களை இயற்றுவதிலேயே தம் கருத்தைச் செலுத்தினர். தமிழர்க்கும் தமிழ்நாட்டிற் கும் பெருமையைத் தரும் நூல்களையே இயற்றினர். இதனையே அவர்கள் தம் வாழ்க் கையின் நோக்கமாகக் கொண்டு உழைத்து

வந்தனர். அதனால் தமிழ் வளர்ந்தது; தமிழர் உயர்ந்தனர்; தமிழ்நாடு தலைசிறந்த நாடாகத் தழைத்து ஓங்கியது.

## தாய்மொழிப் பற்றும் தொண்டும்

தமிழையும் தமிழ்நாட்டையும் உயர்வு அடையுமாறு செய்தவர்கள் பலர். அவர்களில் பேரரசர்களும் உண்டு; சிற்றரசர்களும் உண்டு; வள்ளல்களும் உண்டு; செல்வர்களும் உண்டு; செந்தமிழ்ப் புலவர்களும் உண்டு. தாய்நாடும் தாய்மொழியும் தழைத்து ஓங்குமாறு செய்ய, ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற தொண்டைச் செய்ய வேண்டும். நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் இல்லாத மக்கள் நன்மக்கள் ஆகார். தமிழ்நாட்டில் தோன்றிய ஒவ்வோர் ஆண்மகனும் நாட்டின் நன்மகனாக விளங்க முயல வேண்டும்; ஒவ்வொரு பெண்மகளும் நாட்டின் நன்மகளாக விளங்க முயல வேண்டும். தாய்மொழிப் பற்றையும் தாய்நாட்டுப் பற்றையும் நம் இளைஞர்கள் உள்ளத்தில் ஊட்டும் தலைவர்கள் சிலருடைய வரலாறுகளை இச்சிறு நூலில் காணலாம். அவற்றைக் கற்று, அவர்களைப் போல் நாமும் உயிரினும் சிறந்த நம் தாய் மொழியைக் காத்தல் வேண்டும்.

## 2. இலக்கணம் அருளிய இறைவனார்

### பாண்டிய நாட்டில் பஞ்சம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் பாண்டிய நாட்டை உக்கிரப் பெருவழுதி என்னும் மன்னன் ஆண்டுவந்தான். அவன் காலத்தில் பாண்டிய நாட்டில் பெரிய பஞ்சம் ஒன்று ஏற்பட்டது. பருவ மழை சிறிதும் பெய்யாத காரணத்தால் பன்னிரண்டு ஆண்டுகள் அப்பஞ்சம் நீடித்தது. மக்கள் நீரும் உணவும் கிடையாமல் மிக்க துன்பம் அடைந்தனர். அதனால் அவர்கள் வளமுள்ள நாட்டைத் தேடிச் சென்றனர்.

### பாண்டியன் வேண்டுகோள்

களஞ்சியத்தில் பொருள் இல்லாமையால் பாண்டியன் மிகவும் வருந்தினான். அவன் தமிழ்ப் புலவர்களை ஆதரிக்க முடியாமல் அல்லற்பட்டான். ஒருநாள் அவன் புலவர்களைத் தன் அரசவைக்கு வருமாறு அழைத்தான். அவர்களிடம் நாட்டின் பஞ்ச நிலையைப் பற்றிச் சொன்னான். அதனால் தான் படும் துன்பத்தையும் எடுத்துக் கூறினான். 'நீங்கள் வளமுடைய வேறொரு நாட்டிற்குச் செல்லுங்கள்!' என்று வேண்டினான். 'மழை

பொழிந்து நாடு வளம்பெற்றதும் மீண்டும் இங்கு வந்து சேருங்கள்' என்றும் கூறினான்.

**புலவர்கள் பிறநாடு புகுதல்**

பாண்டியன் கருத்தைப் புலவர்கள் அறிந்து வருந்தினர். வேற்று நாடு செல்வதற்கு எல்லாரும் விரைந்து புறப்பட்டனர். அவர்கள், தம்மை ஆதரிக்கும் அரசர்கள் உள்ள நாட்டைத் தேடிச் சென்றனர். அவர்கள் தமிழ் நாட்டின் பல இடங்களில் சென்று தங்கினர். தாம் தங்கிய இடத்திலேயே தமிழையும் வளர்த்துக்கொண்டு இருந்தனர்.

**அரசன் சங்கத்தை அமைத்தல்**

இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. நாடு செழிக்குமாறு நல்ல மழை பெய்தது. பாண்டிய நாட்டில் உள்ள ஆறுகளில் வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. ஏரி குளங்கள் எல்லாம் நீரால் நிரம்பின. நிலம் எங்கும் பயிர்கள் செழித்து ஓங்கின. பாண்டிய நாட்டில் பஞ்சம் அடியோடு அகன்றது. மக்கள் வறுமை நீங்கிப் பெருமையுடன் வாழத் தொடங்கினர். அரசன் களஞ்சியத்தில் பொன்னும் மணியும் பொங்கிக் குவிந்தன. உடனே அவன் தமிழ்ச் சங்கத்தைத் திரும்பவும் கூட்ட விரும்பினான். தமிழ்ப் புலவர்களை

அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினன். தமிழ்நாட்டின் எல்லாப் பகுதிகளுக்கும் ஏவலாட்கள் சென்று தேடினர். அவர்கள் புலவர்கள் பலரை அழைத்து வந்தனர். பாண்டியன் அவர்களைச் சங்கத்தில் அமரு மாறு செய்தான்.

### மன்னன் வருத்தம்

சங்கத்தைக் கூட்டிய பாண்டியன் தமிழ் இலக்கணத்தைப் புதிய முறையில் அமைக்க எண்ணினன். காலத்திற்கு ஏற்றவாறு இலக்கணத்தை மாற்றி அமைக்கக் கட்டளை யிட்டான். தமிழ் இலக்கணம் ஐந்து வகைப் படும். அவை எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்று கூறப்படும். எழுத்து, சொல், யாப்பு, அணி இவற்றில் வல்லமை வாய்ந்த புலவர்கள் சங்கத்தில் இருந்தனர். பொருள் இலக்கணத்தில் புலமை உடையவர் ஒருவரேனும் அங்கு இல்லை. அதனை அறிந்த பாண்டியன் மிகவும் வருந்தினன். 'எழுத்தும் சொல்லும் கற்பது பொருளை அறிவதற்கு அல்லவா ? பொருள் இலக்கணத்தைப் பெற வழி இல்லையே? அப்படியானல் மற்ற இலக் கணங்களைப் பெற்றும் பயன் இல்லை ' என்று சொல்லி வருந்தினன்.

**இறையனார் அகப்பொருள் எழுதுதல்**

மதுரைத் திருக்கோவிலில் எழுந்தருளிய இறைவர், அரசன் கவலையை அறிந்தார். 'அவனது கவலை கல்வியைப் பற்றியதாக இருக்கிறது; ஆதலின் நாம் அதனைத் தீர்க்க வேண்டும்' என்று திருவுளம் கொண்டார். மூன்று செப்புத் தகடுகளை எடுத்தார். அவற்றில் அறுபது சிறு செய்யுட்களை எழுதினார். அதற்கு '**இறையனார் அகப்பொருள்**' என்று பெயரிட்டார். அத் தகடுகளைத் தம் பீடத்தின் அடியில் வைத்தார்.

**அந்தணன் கையில் அகப்பொருள்**

மறுநாள் காலையில் வழக்கம் போல் திருக்கோவில் திறக்கப்பட்டது. அங்கு வழிபாடு செய்யும் அந்தணன் வந்தான். அவன் இறைவர் இருக்கும் இடத்தைத் துப்புரவு செய்தான். அப்பொழுது அவன் கையில் செப்புத் தகடுகள் மூன்றும் கிடைத்தன. அந்தணன் அவற்றை எடுத்து வாசித்துப் பார்த்தான். தலைப்பில் 'இறையனார் அகப்பொருள்' என்று எழுதியிருப்பதைக் கண்டான். "பாண்டியன் பொருள் இலக்கணம் பெற முடியாமல் பெரிதும் வருந்துகிறான்; அவன் கவலையைப் போக்க இறைவரே திருவருள் செய்திருக்கிறார்.

அவரே 'இறையனார் அகப்பொருள்' என்னும் இவ் விலக்கண நூலை இயற்றிக் கொடுத்துள்ளார்; இதனைப் பாண்டியனிடம் கொண்டு போய்க் கொடுப்பேன்" என்று தன்னுள் சொல்லிக் கொண்டான்.

### அரசனிடம் தகடுகளை அளித்தல்

அவன் வழக்கமாகச் செய்யும் வழிபாட்டை விரைவில் செய்து முடித்தான். செப்புத் தகடுகளைப் பட்டாடையில் சுற்றினான். அதனை எடுத்துக்கொண்டு பாண்டியன் அரண்மனையை அடைந்தான். அரசனைக் கண்டு வணங்கி, அவன் கையில் செப்புத் தகடுகளைக் கொடுத்தான். அவை கிடைத்த விதத்தையும் அரசனுக்குத் தெரிவித்தான்.

### அரசன் அகமகிழ்ச்சி

உக்கிரப் பெருவழுதியாகிய பாண்டியன் அத் தகடுகளைக் கூர்ந்து நோக்கினான்; தலைப்பில் 'இறையனார் அகப்பொருள்' என்று எழுதியிருப்பதைக் கண்டான். அவற்றில் எழுதியுள்ள செய்யுட்களை வாசித்தான். அவை பொருள் இலக்கணமாக இருப்பதை அறிந்தான். அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு ஓர் அளவே இல்லை. 'நம் கவலையைப் போக்க, இறைவரே இலக்கணம் இயற்றினார்;

அப் பெருமானுடைய திருவருளை எவ்வாறு போற்றுவேன்! அவர் தமிழைக் காத்த கருணையை எங்ஙனம் துதிப்பேன்!' என்று ஆடிப் பாடினான். மதுரைத் திருக்கோவிலுக்குச் சென்றான். அங்கு எழுந்தருளிய சொக்கநாதராகிய இறைவரைத் தரையில் விழுந்து வணங்கினான். 'அகப்பொருள் இலக்கணத்தை அருளிய இறைவரே! நீர் என்றும் எங்கள் தமிழ்மொழியைக் காத்தருள வேண்டும்' என்று பணிந்து வேண்டினான்.

**பாண்டியன் உரை எழுதுமாறு வேண்டுதல்**

பின்பு பாண்டியன் அத் தகடுகளை எடுத்துக்கொண்டு தமிழ்ச் சங்கத்தை அடைந்தான். அங்கு இருந்த தமிழ்ப் புலவர்களிடம் அவற்றைக் கொடுத்தான். 'இஃது இறையனார் அருளிய அகப்பொருள் இலக்கண நூல்; நீங்கள் இந்நூலுக்கு நல்ல உரையினை ஆராய்ந்து வரையுங்கள்' என்று வேண்டினான். இறையனார் அகப்பொருளைக் கண்ட புலவர்கள் அளவற்ற இன்பம் அடைந்தார்கள். அதற்கு ஒவ்வொருவரும் உரை எழுதத் தொடங்கினார்கள்.

**பொதுநலப் பணியின் பெருமை**

இவ் வரலாற்றால் நாம் அறிவது என்ன? பாண்டிய மன்னன் பைந்தமிழைக் காக்க

விரும்பினான். அதற்குப் புதிய முறையில் இலக்கணம் அமைக்க எண்ணினான். அச் செயலைச் செய்யத்தக்க புலவர் இல்லை. இறைவரே அரசன் விரும்பிய இலக்கணத்தை அமைத்துக் கொடுத்தார். பொதுநலம் விரும்பிய மன்னன் கவலையைக் கடவுளே போக்கி யருளினார் அல்லவா ! அதுபோலப் பொதுநலம் காப்பவர்க்குக் கடவுள் எப் பொழுதும் துணையாக இருப்பார் என்ற உண்மை விளங்குகிறது அல்லவா ?



# 3. உரைகண்ட உத்தமன்

### மதுரையில் உப்பூரிகுடி

முற்காலத்தில் பாண்டிய நாட்டின் தலை நகரமாக மதுரைமா நகரம் விளங்கியது. மதுரம் என்ற சொல்லுக்கு இனிமை என்பது பொருள். அந்நகரம் மக்கள் வாழ்வதற்கு மிக்க இனிமையானது. ஆதலின் அது மதுரை என்று பெயர் பெற்றது. இம் மதுரைமா நகரின் ஒரு பகுதியில் வணிகர் பலர் சேர்ந்து வாழ்ந்தனர். அப்பகுதிக்கு உப்பூரிகுடி என்று பெயர்.

### வணிகர் தலைவரின் வருத்தம்

உப்பூரிகுடியில் வாழ்ந்த வணிகர்களுக்குத் தலைவர் ஒருவர் இருந்தார். அவர் பெரிய செல்வர் ; ஒழுக்கத்திலும் அறிவிலும் உயர்ந் தவர். அவரை எல்லாரும் உப்பூரிகுடி கிழார் என்றே சொல்லுவர். அவர் வாணிகத்தால் மிகுந்த செல்வத்தைத் தேடினார். ஆனால் அவருக்கு நீண்ட நாட்களாகப் பிள்ளைச் செல்வம் இல்லை. அறிவுடையோர் மக்கட் செல்வத்தையே சிறந்த செல்வமாக மதிப்பர். அச் செல்வம் இல்லாதவன் மற்றச் செல்வங் களையெல்லாம் பெற்றிருந்தாலும் பயன்

இல்லை. ஆதலின் உப்பூரிகுடி கிழார் தமக்கு மக்கட் செல்வம் இல்லையே என்று மிக்க வருத்தம் கொண்டார்.

**பிள்ளைச் செல்வம் பெறுதல்**

அவர் நாள்தோறும் மதுரைத் திருக் கோவிலுக்குச் செல்லுவார். அங்கே எழுந் தருளும் சொக்கலிங்கப் பெருமானை மிக்க பத்தியுடன் வழிபடுவார். அப்பெருமானிடம் தமக்குப் பிள்ளையில்லாக் குறையினை முறை யிடுவார். நன் மகவு ஒன்றைத் தந்தருள வேண்டும் என்றும் நாள்தோறும் வரம் கேட்பார். அவ்வாறு வழிபட்டதன் பயனாக அவருக்கு ஆண்குழந்தை ஒன்று பிறந்தது. அது முருகனைப் போல் மிகவும் அழகாக இருந்தது. அதன் முகத்தில் அறிவொளி நன்றாக வீசியது. அது தெய்வத்தன்மை வாய்ந்த ஒரு குழந்தையாகத் தென்பட்டது.

**உருத்திரசன்மன்**

அக்குழந்தையின் சிறப்பைக் கண்ட உப்பூரிகுடி கிழார் ஒப்பில்லாத உவகை அடைந்தார். அக் குழந்தைக்கு 'உருத்திர சன்மன்' என்று பெயர் சூட்டினார். சிவபெரு மானுக்கு 'உருத்திரன்' என்பது ஒரு பெயர். சிறந்த அறிவுடைய ஒருவனைச் 'சன்மன்'

என்பார்கள். சிவனது அருளால் பிறந்த மகன் சிறந்த அறிஞனைப்போல் விளங்கினான். அக் காரணத்தால் அக் குழந்தைக்குத் தந்தையார் உருத்திரசன்மன் என்ற பெயரைச் சூட்டினார்.

### பிள்ளையின் இயல்பும் பெருமையும்

உருத்திரசன்மன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். அவனுடைய கண்கள் பசுமை நிறமாக இருந்தன. அவன் தலையில் உரோமங்கள் குறைவாகவே இருந்தன. அவனுக்கு ஐந்து ஆண்டுகள் நிரம்பிவிட்டன. ஆயினும் அவன் ஊமைப் பிள்ளையாகவே இருந்தான். ஆனால் கூர்மையான அறிவுள்ளவனாகத் தோன்றினான். ஆதலின் தந்தையார் அவனைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவன் பிறந்த நாள் முதல் உப்பூரிகுடி கிழாரின் வாணிகமும் செல்வமும் வளர்ந்து ஓங்கின. வணிகர் வாழும் உப்பூரிகுடி ஊரே வளம் பெற்று விளங்கியது. அதனால் உருத்திரசன்மனை எல்லாரும் முருகன் அவதாரம் என்றே போற்றினர்.

### இலக்கண நூலுக்கு உரை காணல்

அந்நாளில் பாண்டிய நாட்டை ஆண்ட அரசன் உக்கிரப் பெருவழுதி என்பவன்.

அவன் தமிழ்மொழிக்குப் பொருள் இலக்கணம் கிடைக்கவில்லையே என்று கவலைப் பட்டான். அவன் கவலையைப் போக்க, இறைவரே ஓர் அகப்பொருள் இலக்கண நூலை இயற்றிக் கொடுத்தார். அவன் அந் நூலைச் சங்கப் புலவர்களிடம் கொடுத்தான். அதற்குச் சிறந்ததோர் உரை வரையுமாறு வேண்டினன். சங்கத்தில் இருந்த நாற்பத் தொன்பது புலவர்களும் நாற்பத்தொன்பது உரைகளை எழுதிவிட்டனர்.

### அரசனிடம் முறையிடுதல்

அப்புலவர்கள் ஒவ்வொருவரும் தத்தம் உரையே உயர்ந்தது என்று பேசித் திரிந்தனர். அவற்றில் சிறந்த உரை எது என்பதை அறிய விரும்பினர். அவர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து பாண்டியன் அரண்மனையை அடைந் தனர். அவனை நேரில் கண்டு, தங்கள் கருத் தைக் கூறினர். "அரசே! நாங்கள் ஒவ்வொரு வரும் தனித்தனியே உரை கண்டு வரைந்துள் ளோம்; எங்கள் உரைகளில் எவரது உரை உயர்ந்தது என்பதை அறிய வேண்டும்; அதனைத் தேர்ந்து சொல்லுவதற்கு வல்லமை வாய்ந்த ஒருவனை நீ வழங்கியருள வேண்டும்; அவன் நடுநிலையாளனாக இருக்க வேண்டும்" என்று முறையிட்டனர்.

### பாண்டியன் வியப்பும் வினவும்

சங்கப் புலவர்கள் கூறிய செய்தியைப் பாண்டியன் கேட்டான். அவர்களை நோக்கி, "நீங்கள் நாற்பத்தொன்பது பேர்களும் நாட்டிலேயே புகழை நாட்டிய பெரும் புலவர்கள் அல்லவா? உங்களுக்கு மேலான ஒருவன் எங்கே உள்ளான்? அவனைத் தேடி அடைவது எப்படி?" என்று வினவினான்.

### இறைவனிடம் முறையிடுதல்

பின்பு அவன் மதுரைத் திருக்கோவிலை நோக்கி நடந்தான். சங்கப் புலவர்களும் அவனைப் பின் தொடர்ந்து சென்றனர். எல்லாரும் சொக்கநாதக் கடவுளின் திருமுன் போய் நின்றனர். பாண்டியன் அக்கடவுளிடம் முறையிட்டு வேண்டினான். "இறைவரே! இப்புலவர்கள் விரும்பியவாறே ஒரு நடுநிலையாளனைத் தந்தருள வேண்டும்" என்று வணங்கி நின்று வேண்டினான்.

### வானில் எழுந்த ஒலி

அப்போது எல்லாரும் கேட்குமாறு வானில் ஓர் ஒலி எழுந்தது, "இந்நகரைச் சேர்ந்த உப்பூரிகுடியின் தலைவர் ஒருவர் உள்ளார்; அவர் உப்பூரிகுடிகிழார் என்னும் பெயரை உடையார்; அவருக்கு ஒரு மகன்

உள்ளான்; அவன் உருத்திரசன்மன் என்னும் பெயரை உடையவன்; அவன் ஐந்து வயதுச் சிறுவன; ஊமைப் பிள்ளை; அவன் முருகன் அவதாரம்; அவனை அழைத்துவந்து சங்கப் பலகையில் இருத்துங்கள்; புலவர்கள் எல்லாரும் தத்தம் உரையை அவன் முன்னுல் அமர்ந்து சொல்லுங்கள்; உண்மையான உரை கேட்டபொழுது உள்ளம் மகிழ்வான்; ஆனந்தக் கண்ணீரைச் சொரிவான்; அவன் உடம்பில் உள்ள உரோமங்கள் சிலிர்க்கும்; பொய்யான உரை கேட்டபொழுது சும்மா இருப்பான்." இவ்வாறு அந்த ஒலி மூன்று முறை கேட்டது. அதனை அரசனும் புலவர்களும் நன்ருகக் கேட்டனர். உடனே அவர்கள் எல்லாரும் அவ்வாறே செய்வோம் என்று இசைந்தனர்.

### சங்கப்பலகையில் உருத்திரசன்மன்

சங்கப் புலவர்கள் அனைவரும் புறப்பட்டு உப்பூரிகுடியை அடைந்தனர். அங்கு வாழ்ந்த வணிகர் தலைவராகிய உப்பூரிகுடி கிழாரைக் கண்டனர் அவர்கள் தாம் வந்த செய்தியை அவருக்கு அறிவித்தனர். தெய்வக் குழந்தை யாகிய உருத்திரசன்மனைத் தந்து உதவ வேண்டும் என்று அன்புடன் வேண்டினர். அவரது இசைவைப் பெற்று உருத்திரசன்

மனை அழைத்துவந்தனர். அவனுக்கு வெண்ணிறமான பட்டாடையை உடுத்தினர். அவன் தலையில் வெண்ணிறமான பூமாலையைச் சூட்டினர். அவன் உடம்பில் மணமுடைய சந்தனத்தை அணிந்தனர். அவனைச் சங்கப் பலகையில் ஏற்றி அமரச் செய்தனர். சங்கப் புலவர்கள் ஒவ்வொருவராகத் தத்தம் உரையை அவன் முன்பு எடுத்துக் கூறினர்.

**மருதன் இளநாகனுர் உரை**

நாற்பத்தேழு புலவர்கள் வரிசையாகத் தத்தம் உரையை வாசித்துக் காட்டினர். அவற்றை யெல்லாம் உருத்திரசன்மன் அமைதியுடன் கேட்டான், அதுவரை அவன் முகம் மலரவே இல்லை ; சும்மா இருந்தான். மருதன் இளநாகனுர் என்னும் புலவர் தமது உரையைச் சொல்லத் தொடங்கினுர். அவர் உரை சொல்லும்போது சில இடங்களில் மட்டும் உருத்திரசன்மனது முகம் மலர்ந்தது ; அவன் கண்களில் ஆனந்தக்கண்ணீர் சிந்தியது; உடம்பில் உள்ள உரோமங்கள் சிலிர்த்தன.

**நக்கீரர் வரைந்த நல்லுரை**

இறுதியில் சங்கத் தலைவராகிய நக்கீரர் எழுந்தார். உருத்திரசன்மன் முன்னர்ப்போய் அமர்ந்தார். தாம் எழுதிய உரையினை முறை

யாக எடுத்து உரைத்தார். இறையனார் அகப் பொருளில் உள்ள ஒவ்வொரு சூத்திரத் திற்கும் பதம் பதமாக உரை கூறினார். ஒவ் வொரு சொல்லுக்கும் நுட்பமான உரை சொன்னார். அவர் உரை சொல்லத் தொடங் கியது முதல் அதனை முடிக்கும் வரை உருத் திரசன்மனது முகம் நன்றாக மலர்ந்து இருந் தது. அவன் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்த வண்ணமாகவே இருந்தான். உடம்பில் உள்ள உரோமங்கள் சிலிர்க்க உவகையுடன் அந்த உரையைக் கேட்டான்.

### கடவுள் நம்பிக்கை

இந்த இனிய காட்சியைச் சங்கப் புல வர்கள் அனைவரும் பார்த்தனர். எல்லோ ரும் அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தனர். 'இறையனார் அகப்பொருளுக்கு இன்றே உண்மையான உரையைக் கண்டோம்' என்று ஆரவாரம் செய்தனர். நடுநிலையாளனைச் சங்கப் பலகையில் அமர்ந்து உரை கண்ட உத்தமனை வாயார வாழ்த்தினர். இவ் வரலாற்றால் 'கடவுளை நம்பினோர் கைவிடப் படார்' என்ற உண்மை நன்றாக விளங்கு கிறது அன்றோ?

———

# 4. தமிழ் வளர்த்த வழுதி

## வழுதியின் வல்லமை

கடைச் சங்க காலத்தில் உக்கிரப் பெரு வழுதி என்னும் மன்னன், பாண்டிய நாட்டை ஆண்டு வந்தான். வழுதி என்பது பாண்டியரைக் குறிக்கும் பெயர்களுள் ஒன்றாகும். அவன் மதுரைமா நகரைத் தலைநகராகக் கொண்டு, தன் நாட்டை நன்முறையில் ஆண்டான். அவன் பகைவருக்கு அஞ்சாத நெஞ்சுத் துணிவு உடையவன். போர் புரிவதில் தேர்ச்சி பெற்ற திறல் வீரன். அதனால் பாண்டிய நாட்டில் இருந்த சிற்றரசர்கள் எல்லாரும் அவனுக்கு அடங்கி நடந்தனர். உரிய காலத்தில் கப்பப் பொருளைத் தப்பாது செலுத்தி வந்தனர்.

## கானப்பேர்க் கோட்டை

பாண்டிய நாட்டில் கானப்பேர் என்பது ஓர் ஊர். இக்காலத்தில் அது காளையார் கோயில் என்று வழங்கப்படுகிறது. அவ்வூரை வேங்கை மார்பன் என்னும் சிற்றரசன் ஆண்டு வந்தான். அவன் மிக்க வீரம் உடையவன். அவன் தன் ஊரைச் சுற்றி மிகவும் ஆழமான அகழியைத் தோண்டி இருந்தான். வானத்தை முட்டும் உயரமான மதிலைக் கட்டி இருந்தான். அவற்றைச் சுற்றி மரங்கள்

அடர்ந்த காவல்காட்டை அமைத்து இருந்தான். இவ்வாறு அமைத்த பெரிய அரணைச் சுற்றிச் சிற்றரண்கள் பலவற்றைக் கட்டியுமிருந்தான்.

**வேங்கை மார்பன் வீரம்**

இத்தகைய வலிமை வாய்ந்த கோட்டையுள்ளே வீரனாகிய வேங்கை மார்பன் வீறுடன் வாழ்ந்து வந்தான். அவன் தனது உள்ளத் துணிவாலும் உறுதியான கோட்டையாலும் மிகுந்த செருக்குடன் இருந்தான். ஆதலால் அவன் பேரரசனாகிய பாண்டியனுக்கு அடங்கித் திறை செலுத்தவில்லை.

**முற்றுகையும் வெற்றியும்**

இச்செயலை அறிந்த உக்கிரப்பெருவழுதி அவன்மீது அடங்காச் சினம் கொண்டான். அவன் பெரிய படை யொன்றைத் திரட்டினான். கானப்போர் ஊரை முற்றுகையிட்டான். கோட்டையுள் இருந்த வேங்கை மார்பன் மனம் கொதித்துப் போருக்கு எழுந்தான். பாண்டியன் அவனைப் போரில் வென்று அவனது பெரிய கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டான்.

**கானப்பேர் எயில் கடந்தான்**

கோட்டையை இழந்த வேங்கைமார்பன் திரும்பவும் பெரும் படையுடன் பாண்டியனை

எதிர்த்து அவனை வெல்ல முடியாது தோற்று ஓடினான். 'பழுக்கக் காய்ச்சிய இரும்பில் ஊற்றிய நீரையும் மீட்கலாம்; உக்கிரப் பெருவழுதி கைப்பற்றிய கோட்டையை மீட்பது முடியாது' என்று வேங்கை மார்பனே வியந்து வருந்திக் கூறினான். இவ்வாறு பாண்டியன் கானப்பேர்க் கோட்டையைக் கைப்பற்றினான். இக் காரணத்தால் அவனைக் 'கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி' என்று புலவர்கள் போற்றினர்.

## இறையனார் அகப்பொருள்

மூன்றும் தமிழ்ச் சங்கமாகிய கடைச் சங்கத்தில் இருந்த புலவர்களை உக்கிரப் பெருவழுதி தக்கவாறு ஆதரித்தான். தமிழ் மொழிக்குப் புதிய முறையில் இலக்கணம் அமைக்குமாறு புலவர்களைத் தூண்டினான். அவன் பொருள் இலக்கணம் இயற்றப் புலவர்கள் இல்லாமையால் உள்ளம் வருந்தினான். அவனது வருத்தத்தைப் போக்க இறைவரே அகப்பொருள் இலக்கணத்தை ஆக்கிக்கொடுத்தார். அதைப் பெற்று மகிழ்ந்த வழுதி அதற்குச் சிறந்த உரை எழுதுமாறு செய்தான்.

### பாண்டியன் புலமையும் பண்பும்

அவன் உயர்ந்த தமிழ்ப் புலமை உடையவன். செய்யுட்கள் இயற்றும் திறமை பெற்றவன். அவன் பாடிய பாடல்கள் அகநானூறு, நற்றிணை ஆகிய நூல்களில் உள்ளன. அவன், சங்கப் புலவர்கள் அகப்பொருளைத் தழுவிப் பாடிய செய்யுட்களை ஆராய்ந்தான். அவற்றுள் நானூறு பாடல்களைத் தேர்ந்து எடுத்தான். அவற்றை ஊமைப் புலவராகிய உருத்திரசன்மரின் துணைகொண்டு ஒன்றுசேர்த்தான். அவ்வாறு அவன் தொகுத்த நூலுக்கு அகநானூறு என்று பெயர்.

### திருக்குறள் அரங்கேற்றம்

தமிழ் மொழியில் உள்ள தலைசிறந்த நீதி நூல் திருக்குறள். அதனை இயற்றியவர் திருவள்ளுவர். அவர் தெய்வப் புலவர் என்று புலவர்களால் போற்றப்படுவார். திருவள்ளுவர் தாம் இயற்றிய திருக்குறள் நூலை உக்கிரப் பெருவழுதியின் அரசவைக்குக் கொண்டு வந்தார். அவன் அந் நூலை வாங்கிப் படித்துப் பார்த்தான். அதனுடைய சிறப்பை நன்றாக அறிந்தான். உடனே அவன் அந் நூலைத் தனது அரசவையில் அரங்கேற்றினான்.

**பாண்டியன் பாராட்டு**

அவன் திருவள்ளுவரின் தெய்வப் புல மையை வியந்து பாராட்டினான். 'வேதம் ஓதிய நான்முகனே வள்ளுவராய்த் தோன்றி னான்; நான்கு வேதங்களின் உண்மைப் பொருளைத் திருக்குறளாகப் பாடிக்கொடுத் தான்; இந்த நூலைத் தமிழ்நாட்டில் உள்ள மக்கள் தலையால் வணங்கவேண்டும்; வாயார வாழ்த்த வேண்டும்; நெஞ்சாரக் கற்கவேண் டும்; செவியாரக் கேட்க வேண்டும்' என்று நாடு முழுதும் பறையறைந்து அறிவித்தான்.

**உணர்த்தும் உண்மைகள்**

இங்ஙனம் உக்கிரப்பெருவழுதி பல தமிழ்த் தொண்டுகளைச் செய்தான்; சங்கப் புலவர்களை ஆதரித்துத் துங்கத் தமிழை வளர்த்தான்; தமிழ் நூல்கள் அழிந்து போகாதவாறு காத்தான். அவனது வரலாற் றால் அறிவது என்ன? நாட்டை ஆளும் அரசன் முதல் நாட்டில் வாழும் எளிய மகன் வரை எல்லாருக்கும் தாய்மொழிப் பற்று வேண்டும். அதனைக் காக்க ஒவ்வொருவரும் முயல வேண்டும். இவ் வுண்மைகளை இவ் வரலாறு நமக்கு உணர்த்துகிறது அல்லவா?

---

# 5. சங்கத் தலைவர் நக்கீரர்

**தமிழ் வளர்த்த சங்கங்கள்**

பாண்டிய மன்னர்கள் தமிழைக் காத்து வளர்ப்பதற்கு மூன்று சங்கங்களை அமைத்தனர். அவர்கள் முதன் முதல் தென்மதுரையில் சங்கம் அமைத்தார்கள். அதுவே தலைச் சங்கம் என்று சொல்லப்படும். கபாடபுரம் என்ற நகரில் இரண்டாம் சங்கத்தை அமைத்தனர். அதுவே இடைச்சங்கம் என்று சொல்லப்படும். தென்மதுரையும் கபாடபுரமும் இப்போது உள்ள குமரிக்கடலுக்குத் தெற்கே இருந்த நாட்டில் திகழ்ந்த நகரங்கள். பாண்டிய நாடு, குமரிக்குத் தெற்கிலும் பரந்திருந்த காலத்தில் அவை பாண்டியர் தலைநகரங்களாக விளங்கின. அப்பகுதி சிறிது சிறிதாகக் கடலுள் மூழ்கிவிட்டது. அதன் பின்னர் மூன்றாம் சங்கத்தை அமைத்தனர். அதுவே கடைச் சங்கம் என்று சொல்லப்படும்.

**சங்கத்தின் தலைமைப் புலவர்**

பாண்டியர் மூன்றாவது அமைத்த கடைச் சங்கம் இப்போது உள்ள மதுரைமாநகரில் விளங்கியது. இக் கடைச்சங்கத்தில் நாற்பத்

தொன்பது புலவர்கள் இருந்தனர். அவர்களுக்குத் தலைவராக விளங்கிய புலவரே நக்கீரர் என்பவர். கீரம் என்பதற்குச் 'சொல்' என்பது பொருள். நக்கீரம் என்பதற்கு 'நல்ல சொல்' என்பது பொருள். இவர் நல்ல சொற்களை அமைத்துப் பாட்டு இயற்றுவதில் வல்லவர். ஆதலின் நக்கீரர் என்ற பெயரைப் பெற்றார் என்று சிலர் கூறுவர். க்ஷீரம் என்ற வடமொழிச் சொல்லுக்குப் பால் என்பது பொருள். அச்சொல் தமிழில் 'கீரம்' என்று கூறப்படும். நக்கீரம் என்பதற்கு இனிய பால் என்பது பொருள். நக்கீரர் இனிய பாலைப் போன்ற சுவையான பாட்டுக்களை இயற்றும் புலவர். அதனால் நக்கீரர் என்ற பெயரைப் பெற்றார் என்று சிலர் கூறுவர். இவரைச் சங்கு அறுக்கும் குலத்தில் பிறந்தவர் என்று வேறு சிலர் கூறுவர். கீர்கீர் என்று சங்கை அறுப்பவர் கீரர் என்ற பெயரைப் பெற்றார்; அக் குலத்தில் பிறந்த நல்லவர் நக்கீரர் என்று சொல்லப் பெற்றார். இவ்வாறு அவருக்கு நக்கீரர் என்ற பெயர் வந்ததற்குப் பல காரணங்கள் கூறுவதுண்டு.

**கொண்டான் கொண்ட பித்து**

நக்கீரர் காலத்தில் மதுரையில் சில வடமொழிப் புலவர்களும் வாழ்ந்தனர். அவர்

களிடம் சிலர் வடமொழியைக் கற்று வந்தனர். அவ்வாறு கற்றவர்களில் கொண்டான் என்பவனும் ஒருவன். அவன் குயவர் குலத்தைச் சேர்ந்தவன். அவன் சில ஆண்டுகள் வடமொழியைப் படித்தான். தன் தாய்மொழியாகிய தமிழை மறந்தான். அதன் சிறப்பை அறியாது இகழ்ந்தான். அவனுக்கு வடமொழிப்பற்றுப் பித்தாகப் பெருகியது.

**கோண்டான் பறை சாற்றல்**

ஒரு நாள் அக் கொண்டான் பறை ஒன்றைத் தன் கழுத்தில் தொங்கவிட்டான். மதுரை மாநகரின் தெருக்கள் வழியாக அதனை அடித்துக்கொண்டே வந்தான். கூட்டம் திரளாகக் கூடிய இடத்தில் நின்றான். 'மக்களே! ஆரியம் நல்லது; தமிழ் தீயது; எல்லாரும் ஆரியத்தைப் படியுங்கள்' என்று சொல்லிப் பறையை ஓங்கி அடித்தான். இவ்வாறு பல தெருக்களிலும் உரக்கக் கத்திக் கொண்டே வந்தான்.

**சங்கத்தின் முன்னர் கோண்டான்**

கொண்டான் அடித்த பறை ஓசை கேட்டு, மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் முன்னர் மக்கள் திரளாகக் கூடினர். அக்கூட்டத்தின் நடுவே நின்ற கொண்டான், 'ஆரியம் நன்று.

தமிழ் தீது' என்று முழங்கினான். சங்க மண்டபத்தில் இருந்த தமிழ்ப் புலவர்கள் காதில் அவன் சத்தம் விழுந்தது. சங்கத் தலைவராகிய நக்கீரர் காதையும் அச் சத்தம் துளைத்தது. உடனே அவர் சங்கப் பலகையை விட்டு எழுந்தார். அவரைப் பின்தொடர்ந்து மற்றைய புலவர்களும் எழுந்தனர். எல்லாரும் சங்க மண்டபத்தின் வாயிலுக்கு வந்தனர்.

**நக்கீரர் காதுக்கு நாராசம்**

தமிழ்ச் சங்கப் புலவர்கள் எல்லாரும் ஒன்று கூடி நிற்பதைக் கொண்டான் கண்டான். உடனே தன் பறையை ஓங்கி அடித்தான்; உரக்கப் பேசினான்: "மதுரைமாநகரில் வாழும் மக்களே! நன்றாகக் கேளுங்கள்; ஆரியம் நன்று, தமிழ் தீது; ஆதலின் ஆரியத்தை ஆர்வத்துடன் படியுங்கள்!" என்று முழங்கினான். கொண்டான் கூறிய சொற்கள், நக்கீரர் காதுகளில் நாராசத்தைக் காய்ச்சி ஊற்றினாற்போல இருந்தது. அவன் சொற்களைக் கேட்டுத் தமிழ்ப் புலவர்கள் ஆத்திரம் கொண்டனர். நக்கீரர், கொண்டானை அருகில் வருமாறு அழைத்தார். அவனும் நக்கீரரின் பக்கமாக வந்தான்.

உரையாடல்.

**நக்கீரர் :** கொண்டானே ! நீ பறை அறைந்து கூறும் செய்தி என்ன ?

**கொண்டான் :** 'ஆரியம் நன்று; எல்லாரும் அதனைப் படியுங்கள்' என்று அறிவித்தேன்.

**நக்கீரர் :** அவ்வளவுதான் சொன்னாயா ? அதற்கு மேலும் சொன்னாயா ?

**கொண்டான் :** அதற்குமேல் நான் ஒன்றும் சொல்லவில்லையே !

**நக்கீரர் :** ஆரியத்தைப் படித்தால் பொய்யும் சொல்ல வேண்டுமோ ? ஆயிரக் கணக்கான மக்கள் முன்னால் சொல்லியதை மறைக்கின்றாயே ! இது முறையா ?

**கொண்டான் :** எது முறை? எது முறையில்லை? இதைக் கேட்பதற்கு நீர் யார் !

**நக்கீரர் :** நான் தமிழ்ச் சங்கத்தின் தலைவன் ; தமிழைக் காக்குந் தலைவன் ; நீ 'தமிழ் தீயது' என்று இங்கு உள்ளவர்களிடம் உரைத்தாய் அல்லவா? அவ்விதம் நீ சொல்லக் காரணம் என்ன ?

**கொண்டான் :** நான் வடமொழியாகிய ஆரியத்தைப் படித்தேன். அதன் சிறப்பையும் இன்பத்தையும் அறிந்தேன். அதனை

மக்களுக்கு எடுத்துக் கூறினேன். இதைத் தடுப்பவர் யார்?

நக்கீரர்: ஆரியத்தின் சிறப்பை அறிந்த நீ அதனை எல்லாருக்கும் சொல்லுவதில் தடையில்லை, அதனை நன்ருகச் சொல்லுக! ஆனல் 'தமிழ் தீது' என்று சொல்லுவதை மட்டும் இப்போதே நிறுத்தி விடுக!

கொண்டான்: நான் எதற்காக அதனை நிறுத்த வேண்டும்?

நக்கீரர்: நீ தமிழ்நாட்டில் பிறந்தவன் தானே? உன் தாய்மொழி தமிழ்தானே? நீ முதன் முதல் கற்றது தமிழ்தானே? உன் தாய்தானே உனக்குச் சிறந்தவள்? பெற்ற தாயை வெறுப்பவன் உலகில் உண்டா?

கொண்டான்: நான் தமிழன் என்பதற்காக வடமொழியைப் படிக்கக் கூடாதா? அதன் சிறப்பைப் பிறர்க்கு உரைக்கக் கூடாதா?

நக்கீரர்: அவையெல்லாம் நன்ருகச் செய்க! ஆனல் தமிழைப் பழித்துமட்டும் பேசாதே. தமிழைப் பழிப்பது தாயைப்

பழிப்பது போன்ற செயல் என்பதை நீ உணர வேண்டும்.

கொண்டான் : இவற்றை யெல்லாம் நான் கேட்க விரும்பவில்லை. எனது கருத்தை மதுரையில் மட்டும் அன்று ; மாநிலம் முழுதும் சென்று பறை சாற்றுவேன். அதைத் தடுக்க எவருக்கும் உரிமை இல்லை.

நக்கீரர் : கொண்டானே ! உனக்கு வட மொழிப் பித்துத் தலைக்கு ஏறிவிட்டது. நீ அறிவை இழந்து, அன்னையையும் பழிக்கத் தொடங்கிவிட்டாய். உனக்குச் சரியான பாடம் கற்பித்தே ஆக வேண்டும்.

**நக்கீரர் தந்த சாபம்**

இவ்வாறு நக்கீரர் சினத்துடன் கூறினார். மதுரையில் விளங்கும் சிவபெருமானைச் சிந்தையில் கொண்டு வழிபட்டார். தெய்வத் தன்மை வாய்ந்த தமிழ்ப் புலவர்களை மனத்தில் கொண்டார். ஒரு சிறு பாடலைப் பாடினார்.

'முரணில் பொதியில் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—அரணிய
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்
ஆனந்தம் சேர்க்கசுவா கா.' [டான்

இப்பாடலை நக்கீரர் பாடியதும் கொண்டான் பொத்தென்று நிலத்தில் விழுந்தான். அவன் கண்கள் மூடின; கைகால்கள் அசைவற்றன. சிறிது நேரத்தில் அவன் பிணம் ஆனான்.

### அடாது செய்தவர்க்கு அல்லல்

அவ்விடத்தில் கூடி நின்றவர்கள் கொண்டான் உயிர் இழந்ததைக் கண்டார்கள். "தெய்வத் தன்மை வாய்ந்த நக்கீரருடன் வாதாடினான்; உயிரை இழந்தான். 'அடாது செய்தவர் படாது படுவர்' என்பது உண்மை அல்லவா?" என்று சொல்லி அகன்றனர். கொண்டானின் தாயும் தந்தையும் ஓடோடி வந்தார்கள். மகன் இறந்து கிடப்பதைக் கண்டார்கள். தரையில் விழுந்து புரண்டு அழுதார்கள். சங்கத் தலைவராகிய நக்கீரர் பாதத்தில் விழுந்து பணிந்தார்கள். மகனுக்கு உயிர்ப்பிச்சை அளிக்குமாறு பணிவுடன் வேண்டினார்கள்.

### நக்கீரர் நல்லுரை

பெற்றோரின் துயரத்தைக் கண்ட நக்கீரர் மனம் இரங்கினார். "உங்கள் மகனுக்கு நல்லறிவும் தாய்மொழிப் பற்றும் உண்டாக வேண்டும். நீங்கள் அவனுக்கு அவற்றை ஊட்ட வேண்டும். அந்தக் கடமையைச்

செய்யத் தவறிவிட்டீர்கள். அதனால் அவன் 'ஆரியம் நன்று, தமிழ் தீது' என்று பறை சாற்றிக்கொண்டு திரிகிறான். இனியாவது அவனுக்கு நல்லறிவை ஊட்டுக" என்று சொன்னார்.

'ஆரியம் நன்று தமிழ்தீ(து) என உரைத்த
காரியத்தால் காலக்கோள் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையினால்
செந்தமிழே தீர்க்கசுவா கா'

என்று மீண்டும் ஒரு சிறு பாடலைப் பாடினார்.

### உயிர்பெற்ற கொண்டான்

உடனே பிணமாகக்கிடந்த கொண்டான் கண்விழித்தான். உறங்கி விழிப்பவனைப் போலக் கைகால்களை உதறிக்கொண்டு எழுந்து நின்றான். தரையில் கிடந்த பறையை எடுத்துக் கழுத்தில் மாட்டிக்கொண்டான். திரும்பவும் முன்போலவே 'ஆரியம் நன்று தமிழ் தீது' என்று கத்திக்கொண்டு பறையை அடிக்கத் தொடங்கினான். உடனே அங்கு நின்ற தாய் ஓடி வந்து அவன் வாயைப் பொத்தினாள். "மகனே! என்ன நடந்தது என்பது உனக்குத் தெரியாதா? நீ இவ்வாறு சொல்லித்தானே உயிரை இழந்தாய்; எங்களுடைய வேண்டுகோளால் நக்கீரர் மனம் இரங்கினார். இப்போதுதான் உனக்கு உயிர்ப்

பிச்சை கொடுத்திருக்கிறார். அதனால் நீ உயிர் பெற்று எழுந்தாய். இல்லையேல் உன்னை நாங்கள் இழந்திருப்போம். நக்கீரர் அடி களில் விழுந்து வணங்குவாய். நீ அறியாது செய்த பிழையைப் பொறுத்து அருள வேண்டு வாய்" என்று அன்புடன் கூறினாள்.

### கொண்டானுக்கு அறிவுரை

அது கேட்ட கொண்டான் மனம் மாறியது. அவன் ஓடிச் சென்று நக்கீரரை வணங்கினான். தன்னை மன்னிக்குமாறு பணி வுடன் வேண்டினான். மீண்டும் பறையை அடிக்கத் தொடங்கினான். 'ஆரியம் தீது தமிழ் நன்று' என்று மாற்றி முழங்கினான். அதைக் கேட்ட நக்கீரர் மனம் குளிர்ந்தார். அவனைத் திரும்பவும் அருகில் அழைத்தார். 'நீ இனிமேல் பிறமொழியைப் பழிக்காதே; தாய்மொழியைப் போற்றுக' என்று அன் புடன் வேண்டினார். அன்று முதல் கொண் டான் தண்டமிழை ஆர்வமுடன் கற்கத் தொடங்கினான். சில ஆண்டுகளில் தமிழில் பெரும்புலவனாக விளங்கினான்.

### உணர்த்தும் உண்மைகள்

இவ்வரலாற்றால் நாம் அறிவது என்ன? தகாத செயலைச் செய்வோர் சரியான தண்

டனையைப் பெறுவர். தாயைப் போற்றுவது போலத் தாய்மொழியையும் போற்றுவது நம் கடமை. இவ்வுண்மைகளை நக்கீரர் வரலாற்றால் நன்கு உணர்ந்தோம்.

---

# 6. சங்கப் புலவர் சாத்தனுர்

### சாத்தனுர் ஊரும் பேரும்

தமிழ்நாட்டில் உள்ள சிறந்த நகரங்களில் ஒன்று மதுரை. அது கடைச் சங்க காலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகரமாக விளங்கியது. அந்நகரில் மூன்றும் சங்கமாகிய கடைச்சங்கம் நடைபெற்றது. அச்சங்கத்தில் நாற்பத்தொன்பது தமிழ்ப் புலவர்கள் இருந்தார்கள். அவர்களில் சாத்தனுர் என்பவரும் ஒருவர். அவர் சீத்தலை என்ற ஊரில் பிறந்தவர்; வணிகர் குலத்தைச் சேர்ந்தவர். அவர் மதுரைமாநகரில் தானிய வாணிகம் நடத்திவந்தார். அதனுல் அவரை 'மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனுர்' என்று எல்லாரும் சொல்லுவர். கூலம் என்பதற்குத் தானியம் என்று பொருள்.

### சாத்தனுர் தமிழ்ப்பணி

சாத்தனுர் சிறந்த தமிழ்ப்புலமை உடையவர். புலவர்களின் திறமையை ஆராய்ந்து அறிவதில் அவர் வல்லவர். அவர் தானியங்களின் தரத்தை அளப்பதுடன் புலவர்களின் புலமைத் தரத்தையும் அளந்து வந்தார். பிற புலவர்கள் இயற்றும் செய்யுட்களையும் நூல்களையும் முதலில் சாத்தனுர் பார்வையிடுவார்.

அவர் அவற்றின் தரத்தை அளந்து சொன்ன பிறகே அவை அரங்கேற்றப்படும். அதன் பின்னரே நாட்டுமக்களுக்கு வெளியிடப் பெறும். அவர் ஒரு நூலையோ பாடலையோ தரத்தில் குறைந்தது என்று கூறிவிட்டால் அதனை அரங்கேற்ற முடியாது; நாட்டில் பரப்பவும் முடியாது.

### பாராட்டும் பரிசும்

இம்முறையில் சீத்தலைச் சாத்தனார் சங்கத்தில் பணிசெய்து வந்தார். நாள்தோறும் பல புலவர்கள் சங்கத்திற்கு வருவார்கள். அவர்கள் தனித்தனிப் பாட்டுக்களை இயற்றிக்கொண்டு வருவார்கள். சிலர் நூல்களையும் இயற்றிக்கொண்டு வருவர். அவற்றையெல்லாம் சாத்தனார் எழுத்து விடாமல் வாசித்துப் பார்ப்பார். சிறந்த பாடல்களைப் பாராட்டுவார். அவற்றைப் பாடிய புலவர்களுக்குப் பாண்டியன் பரிசு அளிக்குமாறு செய்வார். அவற்றை நாட்டில் பரப்புவதற்கு இசைவு கொடுப்பார். தகுதியில்லாத பாட்டுக்களைக் கண்டால் அவற்றை எழுதியஏடுகளையே கிழித்து எறிவார்.

### சாத்தனார் தலைவலி

இவ்வாறு தமிழைக் காத்து வந்த சாத்தனாருக்குத் தலைவலி ஏற்பட்டது. அவர் எப்

போதும் பல புலவர்களின் பாட்டுக்களைப் படித்து வந்த காரணத்தால் அத்தலைவலி ஏற்பட்டது. உலகம் முழுவதுக்கும் பயன்படக் கூடிய ஒரு நூல், தமிழில் தோன்றவில்லையே என்ற வருத்தம் அவருக்கு இருந்தது. அதனால் அவரது தலைவலி நாளுக்கு நாள் பெருகி வந்தது.

**மருத்துவன் தாமோதரனார் மருந்து**

இவர் காலத்தில் மருத்துவர் ஒருவர் சங்கப் புலவராக இருந்தார். அவருக்குத் தாமோதரனார் என்று பெயர். அவரைப் புலவர்கள் 'மருத்துவன் தாமோதரனார்' என்று கூறுவர். அவர், சாத்தனார் தலைவலியால் வருந்துவதைக் கண்டார். அவருக்காகத் தனியே புதிதான மருந்து ஒன்றைக் கண்டுபிடித்தார். அதனை மோந்து பார்த்தால் எத்தகைய தலைவலியும் நீங்கிவிடும். அந்த மருந்தைச் சாத்தனாரிடம் கொடுத்து மோந்து பார்க்குமாறு வேண்டினார். அவரும் அதனை மோந்து பார்த்தார். ஆனால் அவரது தலைவலி நீங்கவில்லை. அது கண்டு தாமோதரனார் மிகவும் வருந்தினார்.

**நோய் தீர்த்த நூல்**

அந்நாளில் திருவள்ளுவர் திருக்குறள் நூலைச் சங்கத்திற்குக் கொண்டு வந்தார்.

அதனைச் சாத்தனார் வாங்கி வாசித்துப் பார்த்தார். அதனைப் பல முறைகள் வாசித்து இன்புற்றார். அதனுடைய அருமையையும் இனிமையையும் கண்டு வியந்தார். 'இன்றோடு என் தலைவலி நீங்கியது' என்று சொல்லி எழுந்தார். பாண்டிய மன்னனிடம் அந் நூலைக் கொண்டுபோய்க் கொடுத்தார். அந் நூலின் சிறப்பை யெல்லாம் விளக்கிக் கூறினார். இதனை இயற்றியவர் தெய்வப் புலமை உடையவர் என்று மனமுவந்து பாராட்டினார்.

உலகப் பொதுமறை.

உடனே பாண்டியன் அந்நூலைத் தன் அரசவையில் அரங்கேற்ற வேண்டினான். திருவள்ளுவர் பாண்டியன் அவையில் அதனை வாசித்துக் காட்டினார். அதில் அமைந்துள்ள சிறந்த கருத்துக்களை விளக்கிக் கூறினார். அரசனும் புலவர்களும் அவற்றைக் கேட்டு வியந்தனர். இந்நூல் தமிழருக்கு இணையில்லாத பெருமையைத் தரும் என்று போற்றினர். இந் லால் இனிய தமிழ்மொழி, உலகம் முழுவதும் பரவும் என்று மகிழ்ந்தனர். இந் நூல் 'உலகப் பொதுமறை' என்று போற்றிப் புகழ்ந்தனர்.

**திருவள்ளுவ மாலை**

சங்கத்தில் இருந்த புலவர்கள் எல்லாரும் திருவள்ளுவரைப் புகழ்ந்து பாமாலை தொடுத்தனர். அவர்கள் புகழ்ந்து பாடிய பாட்டுக்களே 'திருவள்ளுவ மாலை' என்று சொல்லப்படுகிறது. சீத்தலைச் சாத்தனார் திருக்குறள் நூலைப் பலகால் படித்துத் தலைவலி நோய் நீங்கினார். அவர் திருவள்ளுவரைப் 'பொய்யில் புலவன்' என்று போற்றினார்.

**கோவலன் கொலை**

இப்புலவர் வாழ்ந்த காலத்தில் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து கோவலன் என்பான் மதுரைமாநகருக்கு வந்தான். அவன் தன் மனைவியாகிய கண்ணகியின் காற்சிலம்பை விற்பதற்காகக் கடை வீதியில் வந்துகொண்டிருந்தான். அப்போது அரண்மனைப் பொற்கொல்லனை அவன் சந்தித்தான். அவனிடத்தே கோவலன் சிலம்பைக் காட்டி விலை மதிக்க வேண்டினான். அப் பொற்கொல்லன் அரண்மனைச் சிலம்பைத் திருடிய கள்வன். அவன் இச்சிலம்பைப் பார்த்தவுடன் கோவலன் மீது பழியைச் சுமத்த எண்ணினான். அரசனிடம் விரைந்து சென்றான். சிலம்பைத் திருடிய கள்வனைக் கண்டு பிடித்து விட்டேன் என்று முறையிட்டான். உடனே

அவன் 'கள்வனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருக' என்று கட்டளை யிட்டான். அதனால் கோவலன் மதுரைமா நகரில் கொலை செய்யப்பட்டான்.

### மன்னனும் மதுரையும் அழிதல்

கணவனை இழந்த கண்ணகி, பாண்டியன் அவைக்குச் சென்றாள்; அவனுடன் வழக் காடினாள்; தன் கணவன் கள்வன் அல்லன் என்பதை நிலைநாட்டினாள். பாண்டியன், தான் நீதி தவறியதை அறிந்தான். உடனே அவன் தன் உயிரை நீக்கினான். அப்போது அவன் பட்டத்தரசியும் உயிர்விட்டாள். கண்ணகி தன் கற்பின் வல்லமையால் மதுரைமா நகரைத் தீக்கு இரையாக்கினாள். பின்பு சேர நாட்டிற்குச் சென்றாள். இந்தச் செய்திகளை யெல்லாம் சாத்தனார் நேரில்கண்டு வருந் தினார். அவரும் சேர நாட்டிற்குச் சென்றார்.

### சேரநாட்டில் சாத்தனார்

அந்நாளில் சேரநாட்டைச் செங்குட் டுவன் என்னும் அரசன் ஆண்டு வந்தான்; அவனுக்குத் தம்பியார் ஒருவர் இருந்தார். அவர் இளமையிலேயே துறவு பூண்டவர். ஆதலின் அவரை இளங்கோவடிகள் என்று அழைப்பர். அவர் சிறந்த தமிழ் அறிஞர்.

சேரநாட்டிற்கு வந்த சாத்தனார், செங்குட்டுவனையும் இளங்கோவடிகளையும் கண்டு மகிழ்ந்தார். அவர்களிடம் மதுரைமாநகரில் நடந்த செய்திகளை விளக்கிச் சொன்னார்; கோவலன், கண்ணகி வரலாற்றையுங் கூறினார்.

## சிலப்பதிகாரம் தோன்றல்

இச் செய்திகளை இளங்கோவடிகள் ஆர்வமுடன் கேட்டார். கோவலன், கண்ணகி வரலாறு சிறந்த உண்மைகளை விளக்குவதை அவர் அறிந்தார். 'அரசன் நீதி தவறினால் அவனை அறக்கடவுள் தண்டிக்கும். கற்புடைய பெண்களைக் கற்றோர் போற்றுவர். ஒருவனது ஊழ்வினை அவனைத்தொடர்ந்து வந்து பயனை ஊட்டும்.' இம் மூன்று உண்மைகளை அவ் வரலாறு நன்கு விளக்குவதைக் கண்டார். ஆதலின் அதனை ஒரு நூலாக இயற்றத் துணிந்தார். சங்கப் புலவராகிய சாத்தனார் கூறிய வரலாற்றை யாய்ந்து முறைப்படுத்தி முப்பது காதைகளாகப் பகுத்து நூலை அழகாக இயற்றினார். அதற்குச் **சிலப்பதிகாரம்** என்ற சிறந்த பெயரைச் சூட்டினார். இது தமிழில் உள்ள இனிய காவியம் ஆகும். இது தமிழ்த்தாயின் பாதத்தில் அணிந்த சிலம்பாக விளங்குகிறது.

**மணிமேகலைக் காவியம்**

கோவலன் கொஞ்ச காலம் மாதவி யென்னும் பொதுமகளுடன் வாழ்க்கை நடத்தினான். அப்பொழுது மாதவிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்குக் கோவலன், மணிமேகலை என்று பெயர் சூட்டினான். கோவலன் மதுரையில் இறந்த செய்தியை மாதவி அறிந்தாள். உடனே அவள் துறவு பூண்டு தவச்சாலையை அடைந்தாள். அவள் மகளாகிய மணிமேகலையும் துறவை மேற்கொண்டாள். இளமையிலேயே துறவு பூண்ட மணிமேகலை அறங்கள் பலவற்றைச் செய்தாள். அவளுடைய துறவு வாழ்க்கையைச் சாத்தனார் ஒரு நூலாகப் பாடினார். அந்நூலுக்கு **மணிமேகலை** என்றே பெயர் அமைத்தார். அந்நூல் தமிழ்த்தாயின் இடையில் அணிந்த மேகலை என்னும் அணியாக மிளிர்கிறது.

உணர்த்தும் உண்மைகள்

இவ்வாறு சாத்தனார் தமிழில் நல்ல பாடல்கள் தோன்றுமாறு செய்தார்; சிறந்த நூல்கள் தோன்றத் துணைபுரிந்தார். அவரே 'மணிமேகலை' என்ற அழகிய நூலையும் இயற்றினார். இத்தகைய பல தமிழ்த் தொண்டுகள்

செய்து தமிழைக் காத்து வளர்த்தார். இவரது வரலாற்றால் நாம் அறிவது என்ன? தமிழில் சிறந்த நூல்கள் தோன்றுமாறு செய்ய வேண்டும். அவற்றையே மக்கள் கற்குமாறும் செய்யவேண்டும். இவ்வுண்மைகளை சாத்தனார் வரலாற்றால் அறிகிறோம் அல்லவா?

---

# 7. திருமுறை கண்ட சோழன்

### முற்காலப் பிற்காலச் சோழர்

நம் தமிழ்நாடு முற்காலத்தில் மூவேந்தர்களால் ஆளப்பெற்ற பெருமை உடையது. அம்மூவேந்தர்களில் சோழர் என்பார் சோழ வளநாட்டை ஆண்டு வந்தனர். ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சோழ மன்னரை முற்காலச் சோழர் என்பார்கள். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிற்பட்ட சோழ மன்னரைப் பிற்காலச் சோழர் என்பார்கள்.

### தஞ்சைப் பெரிய கோவில்

பிற்காலச் சோழ மன்னர்களில் பெருமை வாய்ந்தவன் இராசராசன் என்பான். அவன் தஞ்சை மாநகரைத் தலைநகராகக் கொண்டு சோழப் பெருநாட்டை ஆண்டு வந்தான். அவன் கலைப்பற்றும் கடவுட்பற்றும் நிறைந்தவன். அதனால் தஞ்சைமாநகரில் கலைச் செல்வம் மிக்க திருக்கோவில் ஒன்றை அமைத்தான். அதற்கு 'இராசராசேச்சுரம்' என்னும் பெயரைச் சூட்டினான். அதனைத் 'தஞ்சைப் பெரிய கோயில்' என்று எல்லோரும் சொல்லுவர். அது தமிழ்நாட்டின் கலையறிவை விளக்கும் தலைசிறந்த சின்னமாக விளங்கி வருகிறது.

### திருவாரூர் வழிபாடு

இத்தகைய கலைப்பணி யாற்றிய இராச ராசன் திருவாரூர்க் கோவிலுக்கு அடிக்கடி சென்று வருவான். அக்கோவிலில் எழுந்தருளும் வீதிவிடங்கப் பெருமானிடம் அவன் மிகுந்த பத்தி பூண்டவன். ஆதலின், அப் பெருமானை இடையிடையே சென்று வழி பட்டு வருவான். ஒருநாள் அவன் திருவாரூர்க் கோவிலில் வீதிவிடங்கப் பெருமானை வழி பட்டுக் கொண்டிருந்தான். அப்போது சிவனடியார் ஒருவர் தேவாரப் பாடல்களை உள்ளம் உருகிப் பாடிக்கொண்டு நிற்பதைப் பார்த்தான். அப் பாடல்களை அவனும் கேட்டு அகம் உருகிக் கண்ணீர் சொரிந்தான். அவை திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய அடியார்களால் பாடப் பெற்றவை என்பதை அறிந்தான். அம்மூவரும் பாடிய தேவாரப் பாடல்களை யெல்லாம் ஒன்று சேர்க்க விரும்பினான். அதற்காக அவன் பெரு முயற்சி எடுத்தான்.

### நாரையூர் நம்பி

தில்லையின் அருகே திருநாரையூர் என்ற ஊர் ஒன்று உள்ளது. அங்குள்ள பொல் லாப் பிள்ளையாரை நம்பியாண்டார் நம்பி

என்னும் நல்லார் ஒருவர் நாள்தோறும் வழி பட்டு வந்தார். அவர் அப்பிள்ளையாரின் அருளைப் பெரிதும் பெற்றவர். அவரைப் பற்றி இராசராசன் கேள்விப்பட்டான். அவருடைய துணையால் தேவாரப் பாடல்களைத் தொகுக்கலாம் என்று அவன் எண்ணினன். அவரைத் திருநாரையூரில் சென்று கண்டான். அவரிடம் தனது விருப்பத்தைத் தெரிவித்தான்.

### நம்பியின் நல்லுரை

அதைக்கேட்ட நம்பி, "தேவாரப் பதிகங்கள் எழுதிய ஏடுகள் எல்லாம் தில்லையில் உள்ளன; அங்குள்ள பொன்னம்பலத்தின் அருகே அமைந்த அறையில் பூட்டிவைக்கப் பெற்றுள்ளன. அவற்றைப் பாடியருளிய மூவரின் கை முத்திரையுடன் காப்புச் செய்யப்பட்டுள்ளன; தில்லைவாழ் அந்தணர்களின் இசைவைப் பெற்று, அறைக் கதவைத் திறந்தால் அவ்வேடுகள் கிடைக்கும்" என்று கூறினார்.

### தில்லையில் இராசராசன்

உடனே இராசராசன், நம்பியை அழைத்துக்கொண்டு தில்லையை அடைந்தான். அங்கிருந்த அந்தணப் பெரியார்களிடம் வந்த

செய்தியை அறிவித்தான். அவர்கள், "ஏட்டைப் பூட்டிவைத்த புண்ணியர்களே வந்தால் தான் அறையின் கதவைத் திறப்போம்" என்றனர். அதைக்கேட்ட அரசன், தேவாரம் பாடியருளிய மூவருக்கும் பெரிய விழாவை நடத்தினன். அவர்கள் திருவுருவங்களை அழகிய பல்லக்கில் வைத்து அலங்கரிக்கச் செய்தான். அப் பல்லக்கைப் பொன்னம்பலத்தைச் சார்ந்த அறையின் முன்னர்க் கொண்டுவந்து நிறுத்தினன். "தேவாரம் பாடி, அறையுள்ளே மூடி வைத்த மூவரும் எழுந்தருளினர்; இனிக் கதவு திறக்கலாமே!' என்று அன்புடன் கூறினன்.

### அரசன் அடைந்த துயரம்

தில்லைவாழ் அந்தணர்கள் அரசன் செயலைக் கண்டு வியந்தனர். அந்த அறையின் கதவைத் திறந்து காட்டினர். அந்தோ! அங்கிருந்த ஏடுகளைக் கரையான் புற்று மூடி இருந்தது. அதைக்கண்ட அரசன் அளவில்லாத துயரம் கொண்டான். புற்றினை நீக்கி ஏடுகளைச் சிதையாது எடுக்குமாறு கட்டளையிட்டான். கரையான் அரித்தவை போக எஞ்சிய ஏடுகளில் இருந்த பாடல்களை ஒன்று சேர்க்குமாறு நம்பியை வேண்டினன்.

### தேவாரத் திருமுறைகள்

அவர் பெரிதும் முயன்று அப்பாடல்களைத் தொகுத்தார். திருஞானசம்பந்தர் பாடிய தேவாரப் பாடல்களை முதல் மூன்று திருமுறைகளாக வகுத்தார். திருநாவுக்கரசர் பாடிய தேவாரப் பாடல்களை அடுத்த மூன்று திருமுறைகளாக வகுத்தார். சுந்தரர் பாடிய செந்தமிழ்த் தேவாரப் பாடல்களை ஏழாம் திருமுறையாக வகுத்தார். இவ்வாறு மூவர் அருளிய பாடல்களை எல்லாம் முதல் ஏழு திருமுறைகளாக வகுத்துக் கொடுத்தார்.

### திருமுறை கண்ட சோழன்

இராசராசன், நம்பியாண்டார் நம்பி என்பாரின் நல்ல துணையால் தேவாரப் பாடல்களைக் கண்டுபிடித்தான். அவற்றைத் திருமுறைகளாக வகுத்துத் தமிழ்நாட்டிற்கு வழங்கினான். அவன் அத்தகைய முயற்சி எடுத்துக் கொள்ளாது போனால் மூவர் தேவாரம் மண்மூடி அழிந்து போயிருக்கும். அவற்றை அழியாது காத்த பெருமை இராசராசனுக்கு உரியதாகும். ஆதலின் அவனைப் புலவர்கள் எல்லோரும் 'திருமுறை கண்ட சோழன்' என்று போற்றினர். அம்மன்னனால் தமிழும் சைவமும் தனிச்சிறப்பெய்தின.

### திருமுறையின் பெருமை

தேவாரத் திருமுறைகள், தமிழில் தோன்றிய சிறந்த தோத்திர நூல்கள். அவற்றில் உள்ள பாடல்கள் தெய்வத்தன்மை வாய்ந்தவை; படிப்பவர் மனத்தைப் பத்தி வெள்ளத்தில் இழுத்துச் செல்லும் வல்லமை உடையவை; மக்களுக்கு நன்னெறியைக் காட்டும் மாண்புடையவை. இத்தகைய சிறந்த தமிழ்ப் பாடல்களை அழியாமல் இராசராசன் காத்தான். அவை நாடெங்கும் பரவுமாறு நல்ல பணிகளைச் செய்தான். இக் காரணத்தால் அவன் தமிழ் காத்த தலைவருள் ஒருவன் ஆனான்.

### உணர்த்தும் உண்மைகள்

இராசராசன் செய்த அரிய பணியால் நாம் அறிவது என்ன? மக்களுக்குக் கலைப் பற்றும் கடவுள் பற்றும் நிரம்ப வேண்டும். அவைகளே ஒருவன் வாழ்வை உயர்வுடைய தாகச் செய்யும். இவ் வுண்மைகளை இராச ராசன் வரலாற்றால் அறிகின்றோம் அல்லவா?

# 8. காவியம் பாடிய காவலன்

### கொற்கை—குலசேகரன்

பாண்டிய நாட்டில் பண்டு விளங்கிய கொற்கை பழைமையான துறைமுக நகரம் ஆகும்; அது சில காலங்களில் பாண்டிய நாட்டின் தலைநகரமாகவும் விளங்கிற்று. ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னால் அந்நகரைத் தலைநகரமாகக் கொண்டு, குலசேகரன் என்னும் மன்னன் தென்பாண்டி நாட்டை ஆண்டு வந்தான்.

### குலசேகரன் மக்கள்

பாண்டியர் குலத்தில் தோன்றிய குலசேகரனுக்கு இரண்டு ஆண்மக்கள் இருந்தனர். அவருள் மூத்தவன் வரதுங்கராமன்; இளையவன் அதிவீரராமன். குலசேகரன் தன் மக்கள் இருவரையும் தக்க புலவர்களிடம் தமிழ்நூல்களைப் பயிலுமாறு செய்தான். அதிவீரராமன் வடமொழியையும் நன்றாகப் பயின்றான். இருவருமே தமிழில் பெரும் புலவர்களாக விளங்கினர்.

### இருவர் அரசர்

குலசேகரன் தன் அறிவுடைய மக்கள் இருவருக்கும் நாட்டைப் பகுத்துக் கொடுத்

தான். மூத்தவனாகிய வரதுங்கராமன் கரி வலம்வந்த நல்லூரைத் தலைநகராகக்கொண்டு அதைச் சூழ்ந்த நிலப்பகுதியை ஆண்டு வந்தான். இளையவனாகிய அதிவீரராமன் தென்காசியைத் தலைநகராகக் கொண்டு, அதைச் சூழ்ந்த நிலப்பகுதியை ஆண்டு வந்தான்.

### பிள்ளைப் பாண்டியன்

அரசனும் புலவனும் ஆகிய அதிவீர ராமனைப் பார்ப்பதற்கு நாடோறும் பல புலவர்கள் வருவார்கள். அவன் அப் புலவர்களின் புலமையினைப் பலவாறு ஆராய்வான். அவர்கள் புலமையில் ஏதேனும் குறை கண்டால், அவர்களின் தலையில் ஓங்கிக் குட்டுவான். 'குற்றமறக் கற்றுக் கவி பாடுக!' என்று இடித்துரைத்து அனுப்புவான். அவன் சிறு பிள்ளைகளைப் போல், புலவர்கள் தலையில் குட்டி வந்தமையால் அவனைப் 'பிள்ளைப் பாண்டியன்' என்று எல்லாரும் சொல்லுவர். அதனால் புலவர் ஒருவர், 'குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியன் இங்கில்லை' என்று பாடினார்.

### அதிவீரராமன் தமிழ்ப் பணி

பிள்ளைப் பாண்டியன் ஆகிய அதிவீர ராமன் தமிழில் குற்றம் நிறைந்த பாடல்கள்

குவிந்துவிடக் கூடாதே என்று எண்ணினான். அதனால் தமிழுக்குக் குறை வந்துவிடுமே என்று வருந்தினான். நல்ல தமிழைக் காக்கும் நோக்கத்துடனேயே அவன் புலவர்களைக் கூட்டி அறிவு புகட்டினான். அன்றியும் பல நூல்களையும் இயற்றினான். அவன் கூர்ம புராணம், இலிங்க புராணம், காசி காண்டம், வாயு சங்கிதை, திருக்கருவை அந்தாதி நூல்கள், நறுந்தொகை முதலிய பல நூல்களைப் பாடியுள்ளான்.

**நைடதம் புலவர்க்கு ஔடதம்**

அதிவீரராமன் தான் இயற்றிய நூல்களை யெல்லாம், தன் தமையனாகிய வரதுங்கராம னிடம் கொண்டுபோய்க் காட்டுவான். அவன் அவற்றைப் படித்து மனமகிழ்வான். அவற் றின் சிறப்புக்களைப் பாராட்டுவான். ஒரு சமயம் அதிவீரராமன் நளனுடைய வர லாற்றைக் காவியமாகப் பாடினான். நளன் நிடத நாட்டை ஆண்ட அரசன் ஆதலின் அந்தக் காவியத்திற்கு 'நைடதம்' என்று பெயர் சூட்டினான். அவன் அந் நூலைத் தன் அவையில் இருந்த புலவர்களிடம் காட்டினான். அவர்கள் எல்லோரும் அதனைப் படித்துச் சுவைத்தனர்; 'நைடதம் புலவர்க்கு ஔடதம்' என்று பாராட்டினர்.

**தமையனிடம் தம்பி**

அதைக் கேட்டு மகிழ்ந்த அதிவீரராமன் அந்நூலை எடுத்துக்கொண்டு தமையனிடம் சென்றான். வரதுங்கராமன் தன் தம்பியை அன்புடன் வரவேற்றான். இருவரும் சிறிது நேரம் அளவளாவினர். பின்பு அதிவீர ராமன் நைடத நூலைத் தமையனிடம் கொடுத்தான். "அண்ணலே! தாங்கள் இந்நூலைப் படித்துப் பார்க்கவேண்டும்; இதன் சிறப்புக்களை எடுத்துரைக்க வேண்டும்" என்று வேண்டினான்.

**தமையன் அறவுரை**

வரதுங்கராமன் தன் தம்பியை நோக்கி, "இந்நூல் சொல்லும் பொருள் என்ன?" என்று கேட்டான். அதற்கு அதிவீரராமன், "இந்நூல் நளனுடைய வரலாற்றை நவில்வது," என்று கூறினான். அது கேட்ட வரதுங்கராமன், "தம்பி! நளன் நம்மைப் போன்று ஒரு மன்னவன்தானே; அவனுடைய வரலாற்றையோ நீ பாடவேண்டும்? உலகில் பிறந்திறக்கும் மக்களைப் பாடுவதால் என்ன பயன் விளையும்? பிறப்பு இறப்பு இல்லாத சிறப்புடைய இறைவன் புகழைப் பாடினால் நிறைந்த பயன் ஏற்படும். அதனால் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் பெற

லாமே? இந்நூலை யான் பார்க்க விரும்ப வில்லை; உன் அண்ணியாரிடம் கொண்டு போய்க் கொடுப்பாய்; அவள் படித்துப் பார்த்து அதன் சிறப்பை உரைப்பாள்," என்று வருத்தத்துடன் கூறினான்.

### அண்ணியாரின் மறுமொழி

தமையன் மொழிகளைக் கேட்ட அதிவீர ராமனுக்குச் சினம் எழுந்தது. எனினும் அதனை ஒருவாறு அடக்கிக் கொண்டான். அண்ணியாரிடம் தன் நூலை எடுத்துக் கொடுத்தான். 'இதனைப் படித்துப் பார்த்து இதன் சிறப்பை எனக்குக் கூற வேண்டும்' என்று வேண்டினான். அவளும் அவ்வாறே செய்வதாகக் கூறி, மைத்துனனை அனுப்பினாள். சில நாட்களில் அந்நூலைப் படித்து முடித்தாள். அவள் தன் கருத்தை ஓலை யொன்றில் எழுதினாள். அதனைத் தூதன் ஒருவன் வாயிலாகத் தென்காசிக்கு அனுப்பினாள்.

### தம்பியின் படையெடுப்பு

ஓலையைப் பெற்ற தூதன் தென்காசியை அடைந்தான். அரசனாகிய அதிவீரராமனை அவையில் கண்டு வணங்கினான். அண்ணியார் அனுப்பிய ஓலையைப் பணிவுடன் கொடுத்

தான். அதனைப் பெற்ற அதிவீரராமன் அதில் எழுதியிருந்த கருத்தைப் பலமுறை படித்தான். 'இந்நூல் வேட்டை நாய் ஓடி இளைத்தது போன்றும், கரும்பினை அடியி விருந்து சுவைத்தது போன்றும் இருக்கிறது' என்று அவ் வோலையில் எழுதியிருந்தது. அதனைக் கண்ட அதிவீரராமனுக்கு நெருப்பில் நெய் வார்த்தது போல் இருந்தது. அவன் தணியாத சினத்துடன் உடைவாளை உருவிக் கொண்டு புறப்பட்டான். "இப்பொழுதே தமையன் தலையை வெட்டி வீழ்த்துவேன்" என்று வீரம் பேசினான். படைவீரர் பலருடன் அவன் கரிவலம்வந்த நல்லூரை அடைந்தான்.

## வழிபாட்டு வேளை

அங்கு வந்த அதிவீரராமன், தமையன் அரண்மனையுள்ளே புகுந்தான். அங்கு வரதுங்கராமன் இறைவழிபாட்டில் ஈடுபட்டிருந்தான். அவன் நாள்தோறும் தவறாது சிவபூசை செய்பவன். பூசையின் முடிவில் சிவபெருமானைத் துதித்துச் செய்யுள் ஒன்று இயற்றுவான். பூமாலையுடன் அப் பாமாலையினையும் அணிந்து மகிழ்வான். அரண்மனையுள்ளே புகுந்த அதிவீரராமன், தமையன்

சிவபூசை செய்து கொண்டிருப்பதைத் தெரிந் தான். வழிபாட்டு வேளையில் எந்த வன்செய லும் செய்யக்கூடாது என்று பொறுத்திருந் தான். அவன் கையில் வாளையேந்திப் பூசை யறையின் வாசலிலேயே நின்றுகொண்டிருந் தான்.

### இறைவனுக்குப் பாமாலை

வரதுங்கராமன் சிவபூசையை முடித் தான். வழக்கம்போல் பாமாலை யொன்றைத் தொடுத்துப் பத்தியுடன் பாடி வழிபட்டான். 'இறைவன் புகழையே எப்போதும் பாட வேண்டும், உலகில் பிறந்திறக்கும் மக்களைப் பாடுவதால் பயன் இல்லை; அவ்வாறு பாடு வது மீண்டும் மீண்டும் உலகில் பிறப்ப தற்குக் காரணமாகும். கோடிக்கணக்கான நரகக் குழியில் விழுந்து அழுந்துவதற்கும் அது காரணமாகும். ஆதலால் புலவர்களே! நீவிர் இறைவனையே நெஞ்சுருகிப் பாடுங்கள்!' இக்கருத்தினையுடைய பாடல் ஒன்றை அவன் பாடினான்.

### அரசன் பிழையை அறிதல்

அப்பாட்டைக் கேட்ட அதிவீரராமன் உள்ளம் தழலில்பட்ட மெழுகைப் போல் உருகியது. அவன் கையில் இருந்த வாள்

தானாகவே நழுவித் தரையில் விழுந்தது. பூசையறையில் புகுந்து தமையன் தாளில் விழுந்து பணிந்தான். பிழையைப் பொறுத்து அருளுமாறு தமையனை வேண்டினான். குற்றத்தை உணர்ந்துகொண்ட தம்பியைத் தமையன் வாரித் தழுவிக் கொண்டான்.

### அண்ணியாரின் அறிவுரை

இச்சமயத்தில் அங்கு வந்த வரதுங்கன் மனைவி நிகழ்ந்ததை அறிந்தாள். அவள் தன் மைத்துனனாகிய அதிவீர ராமனுக்குச் சிறந்த அறிவுரை யொன்றைக் கூறினாள். "அரசே! உடன்பிறப்பு என்பது உயர்ந்த தோள் வலிமை அல்லவா! அதனை இழக்கத் துணிந் தீரே! இராமனும் பரதனும் போன்ற உடன் பிறப்பு அல்லவா உலகில் உயர்வைத் தரும்; கதிரவன் மைந்தனாகிய சுக்கிரீவனையும், இலங்கை வேந்தனாகிய இராவணனையும், பாண்டவரில் ஒருவனாகிய பார்த்தனையும் உடன் பிறப்பின் சிறப்பை உணர உற்று நோக்காதீர்!"

'செஞ்சுடரின் மைந்தனையும் தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரில் பார்த்தனையும் பாராதே—விஞ்சு
விரதமே பூண்டிந்த மேதினியை ஆண்ட
பரதனையும் ராமனையும் பார்'

என்று பாடி, நாடாளும் மன்னனுக்கு நல்லறிவு கொளுத்தினாள்.

### உணர்த்தும் உண்மை

அண்ணியாரின் அறிவுரையைக் கேட்டு அதிவீரராமன் அகமகிழ்ந்தான். அவன் சிற்றறிவுடைய புலவர்களின் தலையில் குட்டிச் சிறந்த அறிவைப் பெறுமாறு செய்தான். அவனும் நைடதம் போன்ற நன்னூல்களைப் பாடி நற்றமிழைக் காத்து வளர்த்தான். இவ் வரலாற்றால் நாம் உணர்வது என்ன? கற்பவற்றைக் கசடறக் கற்கவேண்டும். கற்றவாறே வாழ்வில் நிற்றலும் வேண்டும். இவ்வுண்மைகளை அதிவீரராமன் செயல்களால் அறிகின்றோம் அல்லவா?

---

# 9. தமிழ்ச் சங்கம் அமைத்த தலைவர்

**சேது நாடு**

பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாய் விளங்குவது சேதுநாடு. இராமநாதபுரமும் அதைச் சூழ்ந்த நிலப்பகுதிகளுமே சேதுநாடு என்று குறிக்கப்பெறும். இராமபிரான் இராவணனை வென்று சீதையை மீட்டுவர இலங்கைக்குச் சென்றான். கடல் நடுவே அமைந்த இலங்கையை அடைவதற்கு அவன் 'சேது' என்னும் அணையைக் கட்டினான். அச் சேதுவைத் தன்பால் கொண்ட நாடே சேது நாடு எனப்பட்டது.

**சேதுக் காவல்பூண்ட சேதுபதி**

இத்தகைய சேதுநாட்டில் மறவர் குல மக்கள் மிகுதியாக வாழ்கின்றனர். முற் காலத்தில் மறவர்குலத்தலைவராக விளங்கிய ஒருவர் அச்சேதுவைக்காக்கும் காவல் தலைமை பூண்டார். அவரே 'சேதுபதி' என்னும் பெயர் பெற்றார். அச்சேதுவை யடுத்து இராமன் பூசித்து வழிபட்ட இராமேச்சுவரம் என்னும் தலம் உள்ளது. அஃது இந்துக்கள் போற்றி வழிபடும் புண்ணியத் தலமாகும். அதனை யடுத்துத் திருப்புல்லாணி, உத்தர

கோசமங்கை என்னும் இரு தலங்கள் உள்ளன. இத்தலங்களை வழிபடுவதற்கு நாட்டின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் திரள் திரளாக வருகின்றனர்.

**சேதுபதிகளின் சிறப்பு**

திருக்கோவில்களைப் பேணிக் காப்பதற்குத் தக்கார் ஒருவர் வேண்டும். தலயாத்திரை வரும் மக்களுக்குக் கள்வராலும் பிறராலும் தீங்கு நேராமல் காப்பளிக்க வல்லார் வேண்டும். இத்தகைய அரும்பணியை ஏற்று நின்றவரே சேதுபதி என்னும் சிறந்த வீரர். அவர் வழியில் தோன்றிய தலைவர்களே 'சேதுபதிகள்' ஆவர். இச்சேதுபதிகள் வீரம், தமிழ்ப்பற்று, தெய்வ பக்தி, கொடை முதலியவற்றால் சிறந்து விளங்கினர்.

**பாலவனத்தம் குறுநில மன்னர்**

இத்தகைய சேதுபதி மரபில் தோன்றிய சிறந்த வீரர் பொன்னுச்சாமித் தேவர் என்பார். இவர் சேதுநாட்டின் பகுதிகளாகிய பாலவனத்தம், பாலயம்பட்டி என்னும் சிற்றூர்களை ஆளும் குறுநில மன்னராக விளங்கினார். இவர் தமிழ்ப்புலவர்களை இனிது ஆதரித்த வள்ளல் ஆவார். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வித்துவான் தியாக

ராசச் செட்டியார், ஆறுமுகநாவலர் போன்ற புலவர்கள், தேவருடைய உதவியைப் பெரிதும் பெற்றவர் ஆவர். ஆறுமுக நாவலர்க்குப் பெரும் பொருளை அளித்துத் திருக்குறள், திருக்கோவையார், சேது புராணம் ஆகிய நூல்களைப் பதிப்பிக்குமாறு செய்தார்.

### தேவரின் மக்கள் மூவர்

இவ்வாறு தமிழைக் காத்த தலைவராகிய பொன்னுச்சாமித் தேவருக்கு ஆண்மக்கள் மூவர் பிறந்தனர். அவர்கள் கோட்டைச் சாமித் தேவர், சீமைச்சாமித் தேவர், பாண்டித்துரைத் தேவர் என்போர் ஆவர். அவர்கள் மூவரும் மூவகையில் சிறந்து விளங்கினர். ஆங்கில அறிவு, உலகியல் அறிவு, சொல்வன்மை, வீரம் இவற்றால் சிறந்தவர் கோட்டைச்சாமித் தேவர். சீமைச்சாமித் தேவர் சிறந்த இசைப்புலமை உடையவர். கடைசிப் பிள்ளையாகிய பாண்டித்துரைத் தேவர் ஈகையிலும் கலைகளிலும் இணையற்று விளங்கினார். இம்மூவரும் இளம்பருவத்தின ராய் இருக்கும் பொழுதே பொன்னுச்சாமித் தேவர் விண்ணுலகு அடைந்தார். அக்காலத்தில் சேது சமஸ்தான ஆட்சியாளராக சேஷாத்திரி ஐயங்கார் என்பவர் இருந்தார்.

அவர் பிள்ளைகள் மூவரையும் நல்ல முறையில் வளர்த்து வந்தார்.

### பாண்டித்துரையின் தமிழ்ப் பயிற்சி

பாண்டித்துரைத் தேவர் கல்வி கேள்வி களில் தேர்ச்சியுற்றார். தம் சொத்துக்களை ஏற்றுக்கொள்ளும் பருவத்தையும் எய்தினார். பாலவனத்தம் குறுநில மன்னராக ஆட்சிப் பொறுப்பை யேற்றார். இவர் சதாவதானம் முத்துச்சாமி ஐயங்காரிடம் கம்பராமாயணம் முழுவதும் பாடம் கேட்டார். மதுரை வித்து வான் இராமசாமிப் பிள்ளையிடம் பல அரிய தமிழ் நூல்களைப் பயின்றார். பழநிக் குமாரத தம்பிரானிடம் சைவசமய நூல்களை நன்றாகக் கற்றுத் தெளிந்தார். இவ்வாறு தேவர் பல புலவர்களிடம் கற்றுத் தமிழறிவையும் சமய அறிவையும் பெருக்கிக்கொண்டார்.

### தேவரின் அரசவை

இவர் செய்யுள் இயற்றும் வன்மையிலும் பேச்சு வன்மையிலும் சிறந்து விளங்கினார். இவருக்கு இசையறிவும் வாய்த்திருந்தது. அதனால் வடமொழிப் புலவர்கள், தமிழ்ப் புலவர்கள், இசைப் புலவர்கள் ஆகியோர் இவர் அவையை எப்பொழுதும் அணி செய் தனர். தேவர் தம் அவையில் தமிழ் நூல்களைப்

பற்றி ஆராய்வார். சிறந்த கருத்துக்களை எடுத்துரைப்பார். பிற புலவர்கள் சொல்லும் அரிய கருத்துக்களைக் கேட்டு மகிழ்வார். இனிய செய்யுட்களை இயற்றுவார். இவ்வாறே பாண்டித்துரைத் தேவர் தம்காலத்தை இனிய முறையில் கழித்துவந்தார். இவர் இராமநாத புரம் மன்னராக விளங்கிய பாஸ்கர சேது பதிக்கு வலக்கை போன்று விளங்கினார். சேதுபதியிடம் பரிசுபெற விரும்பும் புலவரும் கலைஞரும் முதலில் தேவரிடம் தம் திறமை யைக் காட்டிப் பரிசு பெற்று வரவேண்டும். தேவர் மதித்துப் பாராட்டிய புலவர்களுக்கே சேதுபதியின் அரசவையில் வரவேற்பு உண்டு.

**இராகவ சிங்கங்கள்**

தேவர் தமிழ்ப்பெரும் புலவர்களான ரா. இராகவையங்கார், மு. இராகவையங்கார் என்னும் இருவரையும் பெரிதும் ஆதரித்தார். தமக்குக் கம்பராமாயணம் கற்பித்த ஆசிரியர் முத்துச்சாமி ஐயங்காரின் மகனார் மு. இராக வையங்கார் என்ற முறையால் அவருடைய தமிழ்க் கல்வி வளர்ச்சிக்குத் தேவர் பேருதவி புரிந்தார். இவ்விரண்டு இராகவ சிங்கங்களும் சேது வேந்தரின் அவைக்களப் புலவர்களாகச் சிறந்துவிளங்கினர். இவ்விருவரும்இரட்டைப்

புலவர்களைப் போல அத்தை மகனும், அம்மான் சேயும் ஆவர்.



பாண்டித்துரையின் தமிழ்ப்பணி

தேவர் தாம் கற்றுணர்ந்த சிறந்த நூல்களிலிருந்து சுவையான பாடல்களைத் தொகுத்தார். அவற்றைப் பல தலைப்புக்களில் வகுத்தார். 'பன்னூல் திரட்டு' என்னும் பெயருடன் அந்நூலை வெளியிட்டார். சைவ சமயப்

பொதுப்பாடல்களைத்தொகுத்தும் வகுத்தும் 'சைவ மஞ்சரி' என்னும் பெயரால் ஒரு நூலை வெளியிட்டார். தமிழறிஞர் சாமிநாதைய ரைப் பலகால் தமது அரண்மனைக்கு வர வழைத்துச் சிறப்புக்கள் செய்தார். அவரிடம் பெரும்பொருளை உதவிப் புறப்பொருள் வெண்பாமாலை, மணிமேகலை, திருவிளையாடற் புராணம் போன்ற நூல்களை வெளியிடுமாறு செய்தார். மதுரை வித்துவான் இராமசாமிப் பிள்ளைக்குப் பொருள் உதவி புரிந்து, சிவப் பிரகாசர் நூல்களை வெளியிடச் செய்தார். இங்ஙனம் தமிழ் நூல்களை நாடெங்கும் பரவு மாறு செய்து தமிழைக் காத்த தலைவரானார்.

### மதுரையில் தமிழ் நிலை

தேவருக்கு மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரப் பெருமானிடம் மிகுந்த பத்தி யுண்டு. அதனால் அடிக்கடி மதுரைமாநகருக்கு வந்து அப்பெருமானைவழிபட்டுச்செல்லுவார். அவர் தம்முடையமாளிகைக்குச் 'சோமசுந்தர விலாசம்' என்றும் பெயர் வழங்கினார். ஒரு சமயம் அவர் மதுரைக்கு வந்திருந்த பொழுது அவரைச் சொற்பொழிவு ஆற்றுமாறு அறிஞர் பலர் வேண்டினர். அவரும் அதற்கு இசைந்தார். தமிழுக்குக் கதியென விளங்கும்

கம்பராமாயணம், திருக்குறள் என்னும் இரு நூல்களையும் எங்கிருந்தாவது பெற்று வருமாறு ஆட்களை ஏவினார். மதுரையில் எவரிடமும் அந்நூல்கள் கிடைக்கவில்லை. அங்குள்ள கடைகளிலும் அந்நூல்கள் விலைக்குக் கிடைக்கவில்லை. இந்நிலையைக் கண்டு தேவர் மிகவும் வருந்தினார். ஒரு காலத்தில் சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்த மதுரையிலோ இந்த இழிந்த நிலை இருக்கவேண்டும் என்று ஏங்கினார். தமிழ் வளர்த்த பாண்டியரின் தலைநகரமே தமிழை மறந்துவிட்ட நிலை அவரைப் பெரிதும் வாட்டியது.

### மதுரை அரசியல் மாநாடு

1901 ஆம் ஆண்டு மதுரையில் அரசியல் மாநாடு ஒன்று நடைபெற்றது. அம்மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவராகப் பாண்டித்துரைத் தேவர் அமைந்தார். மாநாட்டின் தொடக்கத்தில் தேவர் யாவரும் வியக்குமாறு வரவேற்புரை நிகழ்த்தினார். மூன்று நாட்கள் தொடர்ந்து அம்மாநாடு நடைபெற்றது. மாநாட்டின் முடிவிலும் தேவர் பேச வேண்டிய வாய்ப்பு ஏற்பட்டது. அப்பேச்சே மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கம் அமைப்பதற்குக் காரணம் ஆயிற்று.

### தமிழ்ச் சங்கத் தோடக்கம்

மீண்டும் தொடர்ந்து மூன்று நாட்கள் தமிழ்ச் சங்கத் தொடக்க விழா நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மதுரைச் சேதுபதி கலாசாலை மண்டபத்தில் மாபெரும் கூட்டம் கூடியது. சேதுவேந்தராகிய பாஸ்கர சேதுபதி விழாத் தலைவராகவும் சங்கத்தலைவராகவும் வீற்றிருந்தார். அவ்விழாவில் 'நான்காம் தமிழ்ச் சங்கம்' அமைக்கப்பெற்றது. பாண்டித்துரைத் தேவர், மதுரை வடக்குவெளி வீதியில் இருந்த தமது மாளிகையினைத் தமிழ்ச் சங்கத்திற்குக் கொடையாக மனம் உவந்து கொடுத்தார். சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை, பாண்டியன் புத்தகசாலை, நூல் ஆராய்ச்சிச்சாலை, சங்கப் பதிப்பகம் முதலியன அமைக்கப்பட்டன.

### நான்காம் தமிழ்ச் சங்கம்

நாராயண ஐயங்கார் என்னும் நற்றமிழ்ப் புலவர், கலாசாலைத் தலைமைப் புலவராகப் பணியேற்றார். சங்கத்திலிருந்து 'செந்தமிழ்' என்னும் திங்கள் இதழ் தொடங்கப்பெற்றது. அதற்கு ரா. இராகவையங்கார் ஆசிரியராய் அமர்ந்தார். அதற்குத் துணை ஆசிரியராக மு. இராகவையங்கார் அமைந்தார். சங்கக் கலாசாலையில் தமிழ் வகுப்புக்கள் நடத்தப் பெற்றன. பண்டிதப் பட்டம் பெறுவதற்கு

மாணவர் பலர் தமிழைப் பயிலத் தொடங்கினர். மதுரையில் செந்தமிழ் மீண்டும் செழித்து ஓங்கத் தொடங்கியது.

**சுகாத்தியர் திருக்குறள்**

இங்ஙனம் சங்கம் அமைத்த தலைவராகிய பாண்டித்துரைத் தேவர் அளவிலாத் தமிழ்ப் பற்று உடையவர். பிழைபடப் பேசுவதையும் எழுதுவதையும் பெரிதும் வெறுப்பவர். பிழைகளையுடைய நூல்களைக் கையால் தொடவும் கூசுவார். இத்தகைய தேவரை ஒருகால் 'ஸ்காட்' என்னும் துரைமகனார் காண்பதற்கு வந்தார். அவர் தேவரிடம் ஒரு நூலைக் கொடுத்தார். அழகிய முறையில் அச்சிடப் பெற்றிருந்த அப் புத்தகத்தின் உறையில் 'சுகாத்தியர் திருத்திய திருக்குறள்' என்று பொறித்திருந்தது. அப் பெயரைப் பார்த்ததுமே தேவருக்குச் சினம் எழுந்தது. அப் புத்தகத்தைத் திறந்து பார்த்தார். முதல் குறளிலேயே திருத்தம் செய்யப்பட்டு இருந்தது.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

என்பது முதற்குறள். அதன் இரண்டாவது அடியினை,

'உகர முதற்றே உலகு'

என்று அவர் திருத்தி யிருந்தார். இவ்வாறே அத் துரைமகனார் எதுகை மோனைகள் அமையாத குறட்பாடல்களைத் தமது விருப்பம் போல் மாற்றி அமைத்திருந்தார். அத் திருத்தங்கள் தேவருடைய சினத்தைப் பெருக்கின. அவர் அதனை அடக்கிக்கொண்டார்.

**திருக்குறள் நீக்கிரை**

தேவர், அத்துரைமகனாரை நோக்கித், "தாங்கள் இம்முறையில் எத்தனை படிகள் அச்சிட்டீர்கள்?" என்று கேட்டார். 'ஐந்நூறு படிகள் அச்சிட்டேன்' என்றார் அவர். 'இப்போது தங்கள் கையில் எஞ்சியுள்ள படிகள் எத்தனை?' என்று கேட்டார் தேவர். இருநூறு படிகள் செலவாகி விட்டதாயும் முந்நூறு படிகளே எஞ்சியுள்ளன என்றும் அவர் கூறினார். படியொன்றின் விலை ஒரு ரூபாய் என்று குறித்திருந்தார். தேவர் அத் துரைமகனாரிடம் முந்நூறு ரூபாய்களைக் கொடுத்தார்; 'தங்களிடம் உள்ள முந்நூறு படிகளையும் எனக்கே அனுப்பிவிடுங்கள்' என்று கூறி அவரை வழியனுப்பினார். அவர் தாம் பதிப்பித்த நூலின்மேல் தேவர் மிகுந்த விருப்பம் கொண்டுவிட்டார் என்று எண்ணிச் சென்றார். மறுநாளே மதுரையிலிருந்து அந்

நூல்கள் இராமநாதபுரத்திற்கு வந்து சேர்ந்தன. உடனே தேவர் அவற்றை நெருப்பிற்கு இரையாக்கினார். பிழையான நூல்கள், மக்கள் கையில் ஏறக்கூடாது என்னும் எண்ணத்தாலேயே அவர் அவ்வாறு செய்தார்.

**உணர்ந்த உண்மை**

பாண்டித்துரைத் தேவர் தமிழ்ப் புலவர்களை ஆதரித்தார். தமிழ் நூல்களை வெளியிட்டார். அவற்றை வெளியிடுவார்க்குப் பெரும்பொருளை உதவினார். மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கத்தை நாட்டினார். பிழைபட வெளிவந்த நூல்களைப் பணம் கொடுத்து வாங்கித் தீயில் இட்டார். இவரது வரலாற்றால் நாம் அறிவது என்ன? ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற அளவு தமிழ்ப் பணி செய்ய வேண்டும். இவ்வுண்மையை இவ் வரலாற்றால் தெரிந்தோம் அல்லவா?



# 10. வசனநடை கைவந்த வல்லார்

**பழந்தமிழ் நூல்கள்**

நம் தாய்மொழியாகிய தமிழில் பல்லா யிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட அரிய நூல்கள் பல உள்ளன. சென்ற நூற்றாண்டின் இடைப்பகுதி வரையில் தோன்றிய நூல்கள் எல்லாம் செய்யுள் நடையிலேயே அமைந் தவை. சிலப்பதிகாரம், இறையனார் களவியல் உரை போன்ற சில நூல்களில் இடை யிடையே உரைநடைப் பகுதிகள் காணப்படு கின்றன. அவை யெல்லாம் செய்யுளைப் போன்ற நடையுடையனவே; எளிதாகப் பொருள் உணரும் இயல்புடையன அல்ல.

**உரையாசிரியர்கள் உரைநடை**

இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேரா சிரியர் போன்ற உரையாசிரியர்கள் தொல் காப்பியம் என்னும் இலக்கண நூலுக்கு உரை வரைந்துள்ளனர். திருக்குறள் என்னும் அற நூலுக்குப் பரிமேலழகர் போன்ற பல உரை யாசிரியர்கள் உரை எழுதியுள்ளனர். கலித் தொகை, சிந்தாமணி போன்ற இலக்கியங் களுக்கும் நச்சினார்க்கினியர் உரை எழுதியுள் ளார். சிலப்பதிகாரக் காவியத்திற்கு அடி

யார்க்கு நல்லார் என்னும் ஆசிரியர் உரை எழுதியுள்ளார். இவ்வுரைப் பகுதிகள் எல்லாம் உரைநடையால் அமைந்தவை; பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னமேயே தோன்றியவை. எனினும் அவற்றை முழுதும் உரைநடையால் ஆகிய நூல்கள் என்று சொல்லமுடியாது.

### தமிழ் பரவுதற்குத் தடை

பிற்காலத்தில் செய்யுள் நூல்களைக் கற்பவர் மிகவும் குறைந்தனர். புலவர்களே அவற்றைப் போற்றிக் கற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அதனால் தமிழரிடையே சிறந்த கருத்துக்கள் பரவுதற்குத் தடையாயிற்று. இந் நிலையைக் கண்ட தமிழறிஞர் பலர், காலத்திற்கு ஏற்ற உரைநடை நூல்களை ஆக்கத் தொடங்கினர். உரைநடையை வசனம் என்றும் வழங்குவது உண்டு.

### வசன நடை கைவந்த வல்லார்

சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டில் சிறந்த வசன நூல்களை வரைந்து பரப்பியவர் ஆறுமுக நாவலர் என்னும் அறிஞர் ஆவார். அவரது வசன நடை சிறுவர்களும் விரும்பிக் கற்கும் சுவை உடையதாக அமைந்தது. ஆதலின் அறிஞர்கள் அவரை 'வசன நடை கைவந்த வல்லார்' என்று பாராட்டுவர். அவர்

சிறுவர் முதல் முதியோர் வரை எல்லோரும் நல்ல தமிழ் நூல்களைக் கற்றுணரவேண்டும் என்று விரும்பினார். அதனால் அவர் பழைய செய்யுள் நூல்களை வசனநடையில் எழுதிப் பரப்பிவரலானார்.

### இலங்கை நாட்டில் யாழ்ப்பாணம்

வசன நடையால் தமிழை வளர்த்த ஆறுமுக நாவலர் இலங்கை நாட்டைச் சார்ந்தவர். நம் தமிழகத்திற்குத் தெற்கே கடல் நடுவே அமைந்த ஒரு தீவு இலங்கை நாடு. அதனை ஈழநாடு என்றும் குறிப்பது உண்டு. அவ்விலங்கை நாட்டின் வடபால் உள்ள பகுதிக்கு யாழ்ப்பாணம் என்று பெயர். அங்கு வாழும் மக்களை யாழ்ப்பாணத்தார் என்பர். பண் என்பது இசையைக் குறிக்கும். பண்ணில் வல்லவர் பாணர் எனப்பட்டனர். யாழ் இசையில் வல்லவர்களாகிய பாணர் 'யாழ்ப்பாணர்' என்று வழங்கப்பெற்றனர். யாழ்ப்பாணர்கள் பெருகி வாழ்ந்த இடம் 'யாழ்ப்பாணம்' எனப் பெயர் பெற்றது. இலங்கை வேந்தன் ஆகிய இராவணன் யாழ் இசையில் வல்லவன் அல்லவா? அவன் யாழ் இசை வல்லாரைத் தன் நாட்டில் குடியேற்றி இருக்கலாம்.

யாழ்ப்பாணம் ஞானப்பிரகாசர்

யாழ்ப்பாணத்தில் வாழ்பவர்கள் தமிழ் மக்கள். அவர்கள் தூய தமிழைப் பேசும் இயல்புடையார். அங்குத் தமிழும் சைவமும் தழைத்து ஓங்கி வளர்ந்துள்ளன. அப்பகுதியில் திருநெல்வேலி என்று ஓர் ஊர் உண்டு. அவ்வூரில் ஞானப்பிரகாசர் என்னும் அறிஞர் ஒருவர் தோன்றினர். அவர் கார்காத்த வேளாளர் குலத்தைச் சார்ந்தவர்; தமிழ், வடமொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்லவர். அவர் தமிழ்நாட்டிற்கு வந்து திருவண்ணாமலையில் துறவு பூண்டார்.

பெற்றோரும் உற்றோரும்

இத்தகைய ஞானப்பிரகாசர் மரபில் கந்தப் பிள்ளை என்னும் ஒருவர் விளங்கினர். அவர் யாழ்ப்பாணத்தில் உள்ள நல்லூரைச் சேர்ந்தவர். அவருடைய மனைவியார் சிவகாமியம்மையார். இவர்கள் இருவருக்கும் ஐந்து ஆண்மக்களும் மூன்று பெண்மக்களும் பிறந்தனர். அவ்வைந்து ஆண் மக்களில் இறுதியில் தோன்றியவரே ஆறுமுகநாவலர் ஆவர். முதல் நான்கு ஆண்மக்களும் அரசியல் அலுவல்களில் அமர்ந்திருந்தனர். அவர்கள் முறையே மருத்துவம், இசை, தமிழ்ப்புலமை, உலகி

யல் அறிவு என்பவற்றில் சிறந்து விளங்கினர்.

## இளமைக் கல்வி

ஆறுமுக நாவலர் 1822ஆம் ஆண்டில் பிறந்தார். அவர் இளமையிலேயே கல்வியில் ஆர்வம் உடையவராய் இருந்தார். நல்லூரில் திண்ணைப் பள்ளிக்கூடம் நடத்தி வந்த சுப்பிரமணிய பிள்ளையிடம் அவர் தொடக்கக் கல்வி பயின்றார். அவரிடமே நீதி நூல்களையும் நிகண்டு முதலான கருவி நூல்களையும் கற்றார். அவர் ஒன்பதாம் வயதுவரை சாதாரணமாகக் கற்கும் மாணவரைப் போலவே காணப்பட்டார். அவரது தலை மிகப் பெரியது; பிற உறுப்புக்கள் சூம்பி இருந்தன. அதனால் அவரைப் 'பாணுத்தலையர்' என்று பலரும் அழைப்பர்.

## புலவர்களிடம் தமிழ்க் கல்வி

நாவலருக்கு ஒன்பது வயது நடந்து கொண்டிருக்கும்பொழுது அவர் தந்தையார் இறந்தார். அவர் தாம் இறப்பதற்கு முன் நாடக நூல் ஒன்றை எழுதத் தொடங்கினர். அதனை முடிப்பதற்குள் இறந்துவிட்டார். அப்பொழுது தந்தையார் குறையாக வைத்துச் சென்ற அந் நாடகத்தை நாவலர் பாடி முடித்

தார். அச் செயலைக் கண்டு நாவலரின் தமையன்மார் மிகவும் வியந்தனர். அவருக்குத் தக்க புலவர்களைக் கொண்டு தமிழறிவை ஊட்ட விரும்பினர். அவரை அக்காலத்துச்



சிறந்த பேரறிஞர்களாக விளங்கிய சரவண முத்துப் புலவர், இருபாலைச் சேனாதிராயர் என்னும் புலவர்களிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்குமாறு செய்தனர்.

**ஆங்கிலக் கல்வியும் ஆசிரியப் பணியும்**

அவரது தமிழ்ப் புலமையைக் கண்ட சகோதரர்கள் அவருக்கு ஆங்கிலக் கல்வியும் அளிக்க விரும்பினர். அதனால் அவரைப் பன்னிரண்டாம் வயதில் பார்சிவல் பாதிரி யாரின் ஆங்கிலக் கலாசாலைக்கு அனுப்பினர். அவர் ஆங்கிலத்தையும் பாங்குறப் பயின்றார். ஆங்கிலத்தைத் தமிழிலும் தமிழை ஆங்கிலத் திலும் மொழிபெயர்க்கும் திறமை, அவருக்கு அருமையாக வாய்த்தது. அவரது புலமைத் திறனைக் கண்ட பாதிரியார், அவரைத் தம் கலாசாலையில் ஆசிரியராக நியமித்தார். அவரை மேல்வகுப்பிற்குத் தமிழும், கீழ் வகுப்பிற்கு ஆங்கிலமும் கற்பிக்குமாறு செய்தார்.

**விவிலிய மொழிபெயர்ப்பு**

நாவலரின் இருமொழிப் புலமையைப் பாதிரியார் நன்கு பயன்படுத்த விரும்பினார். கிறித்துவ வேதமாகிய விவிலிய நூலைத் தமிழில் மொழிபெயர்க்குமாறு நாவலரை வேண்டினார். அவரும் அந்நூலைச்செம்மையாக மொழிபெயர்த்தார். தமிழ்நாட்டுச் சென்னை மாநகரிலும் சிலர் விவிலிய நூலைத் தமிழில் மொழிபெயர்த்தனர். பார்சிவல் பாதிரியார், நாவலரைச் சென்னைக்கு அழைத்து வந்தார்.

அவர் ஆக்கிய விவிலிய மொழிபெயர்ப்பைக் கிறித்துவ சங்கத்தாரிடம் அளித்தார். அதைப் போல் அறிஞர்கள் பலர் ஆக்கிய மொழி பெயர்ப்புகளும் சங்கத்தாருக்கு வந்திருந்தன. தமிழும் ஆங்கிலமும் வல்ல அறிஞர்கள் பலர் கூடியிருந்து எல்லாவற்றையும் ஆராய்ந்தனர். அவற்றுள் ஆறுமுக நாவலரின் மொழி பெயர்ப்பே முதன்மையானது என்று தேர்ந்து எடுத்தனர். அதனால் நாவலர் உரைநடை எழுதுவதில் வல்லவர் என்ற புகழ் நாடெங் கும் பரவியது.

சமயப்பணி, தமிழ்ப்பணி

நாவலர் சிவபத்தியிற் சிறந்தவர்; சைவ சமயத்தில் ஆழ்ந்த பற்று உடையவர். அதனால் அவர் சைவ சமய உண்மைகளை நன்றாக அறிய வேண்டும் என்று ஆசைப்பட்டார். அதற் காகச் சைவ சமய நூல்களைச் செம்மையாகக் கற்றுத் தெளிந்தார். வடமொழியில் உள்ள சைவ ஆகம நூல்களைக் கற்று அறிய விரும்பினார். அதற்காக வடமொழியைப் பயின்றார். அதிலும் சிறந்த அறிவைப் பெற்றார். அவர் சைவத்தையும் தமிழையும் வளர்ப்பதையே தம் குறிக்கோளாகக் கொண் டார். அதனை நிறைவேற்றும் வசன நூல்களை எளிய நடையில் எழுதி வெளியிட்டார். அவர்

காலையிலும் இரவிலும் மாணவர் பலருக்குத் தமிழ் நூல்களையும் சமய நூல்களையும் கற்பித்தார். பல ஊர்களுக்கும் சென்று அரிய சொற்பொழிவுகள் ஆற்றினார்.

### சைவப் பிரகாச வித்தியாசாலை

அவர் தமது இருபத்தாறும் வயதில் ஆசிரியப் பணியிலிருந்து விலகினார். யாழ்ப்பாணத்தில் உள்ள வண்ணார்பண்ணை என்னும் ஊரில் 'சைவப் பிரகாச வித்தியாசாலை' என்னும் பள்ளியை அமைத்தார். அப்பள்ளியில் தம் மாணவர்கள் பலரை ஆசிரியர்களாக நியமித்தார். அதன் வாயிலாகச் சமயத்தையும் தமிழையும் பரப்பினார். அப்பள்ளியில் கற்பிப்பதற்காகப் பால பாடங்களையும் சைவ சமய நூல்களையும் எளிய உரை நடையில் எழுதி அச்சிட்டார். சிதம்பரத்திலும் அதைப் போன்று ஒரு பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தினார். யாழ்ப்பாணத்தில் உள்ள பல ஊர்களில் அத்தகைய பள்ளிகளை நிறுவுதற்குத் தூண்டினார். இங்ஙனம் அவர் இடைவிடாமல் தமிழ்த் தொண்டும் சமயத்தொண்டும் ஆற்றி வந்தார்.

### ஆதீனத்தில் 'நாவலர்' பட்டம்

நாவலர் சமயச் சொற்பொழிவு செய்வதில் வல்லவர். தமிழ் இலக்கியங்களைப்

பற்றிப் பேசுவதில் பெருந் திறமை படைத்தவர். அவருடைய சொல்வன்மையைப் பலரும்பாராட்டிப்பேசினர். திருவாவடுதுறை ஆதீனத் தலைவராக இருந்த மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் அவரைப் பற்றிக் கேள்வியுற்றார். அவரைத் தமது திருமடத்திற்கு வருமாறு அன்புடன் அழைப்பு அனுப்பினார். அதனை ஏற்ற ஆறுமுக நாவலர் ஆதீனத் தலைவரைக் காண்பதற்கு வந்தார். அப்பொழுது மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆதீனப் புலவராக அங்கு அமர்ந்திருந்தார். அவ்விடத்தில் நாவலரைச் சமயச் சொற்பொழிவு ஆற்றுமாறு அனைவரும் வேண்டினர். அவருடைய நாவன்மையைக் கண்டு வியந்த ஆதீனத் தலைவர், அவருக்கு 'நாவலர்' என்ற நற்பட்டத்தைச் சூட்டிப் பாராட்டினர். அவருக்குப் பொன்னாடையும் பொற்கிழியும் வழங்கிப் போற்றினர், அவர் தமது இருபத்தேழாம் வயதில் இத்தகைய சிறப்பைப் பெற்றார்.

**வசன நூல்களும் பதிப்புக்களும்**

நாவலருக்குச் செய்யுள் இயற்றும் திறமை சிறு பருவத்திலேயே நன்றாக அமைந்திருந்தது. எனினும் அவர் காலத்திற்கு ஏற்றவாறு தமிழ்த்தொண்டு செய்ய விரும்பினார். மக்க

ளிடையே தமிழ் ஆர்வத்தைப் பெருக்குவ தற்கு வசன நூல்களே தேவை என்று தெரிந் தார். பெரியபுராண வசனம், திருவிளையாடற் புராண வசனம் போன்ற வசன நூல்களை எழுதினார். ஆங்கிலத்தில் உள்ள நிறுத்தற் குறிகளைத் தம் நூல்களில் கையாண்டார். இவ்வகையில் அவர் தமிழுக்கு முதல் வழி காட்டியாய் விளங்கினார். அவர் தம் நூல் களைப் பிழை யில்லாமல் அச்சிடுவதற்குச் சொந்தமான அச்சகம் ஒன்றை அமைத்தார். அதன் வாயிலாகப் பல தமிழ் நூல்களை ஒரு பிழையும் இல்லாமல் அச்சிட்டு உதவினார். 'நாவலர் பதிப்பில் எந்தப் பிழையும் இராது' என்ற உறுதியான நம்பிக்கையை நாட்டில் உண்டு பண்ணினார்.

பதிப்பின் சிறப்பு

ஆறுமுக நாவலர் சென்னையில் 'வித்தி யாநுபாலன இயந்திரசாலை' என்னும் பெய ரால் அச்சகம் ஒன்றை அமைத்தார். அதன் வாயிலாகவும் பல தமிழ் நூல்களைப் பிழை யின்றிப் பதிப்பித்தார். இவருடைய பதிப்பின் சிறப்பை இராமநாதபுரம் பொன்னுசாமித் தேவர், திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் முதலானோர் பார்த்து வியந்தனர். தேவர் பல தமிழ்நூல்களை நாவலரைக் கொண்டு